# கல்கி

KALKI 4-10-81 ரூ. 1.20



"அம்மா! இவ என் கேர்ள் ஃபிரெண்ட்!
கொலு பாத்துட்டுப்பாட வந்திருக்கா!"

# எதிர்கால விவசாயம்



✖ பிளாஸ்டிக் கூரையுடன் கூடிய ஆய்வுக் கூடம்

உலகில் மக்கள் தொகை அதிகரித்துக் கொண்டே போக இயற்கை வளங்கள் குறைந்து கொண்டே வருகின்றன. உணவு உற்பத்தியில் விஞ்ஞான ரீதியான புதிய உத்திகளைக் கையாளா விட்டால் உணவுப் பற்றாக்குறை மாபெரும் பிரச்னையாக உலகம் முழுவதையும் ஆட்டிப் படைக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை.

அமெரிக்காவில் டக்ஸன் என்ற நகரின் அருகே பாலை நிலத்தில் பிரும்மாண்டமான பிளாஸ்டிக் கூரையுடன் பயிர்க் கூடங்கள் எழுந்துள்ளன். அவற்றில் நடக்கும் பல பரிசோதனைகளில் ஒன்று:

சூரியனுக்குப் பதில் மின் விளக்கு ஒளி சிந்துகிறது. அதை மையமாய்க் கொண்டு இரண்டரை மீட்டர் விட்டமுள்ள ஒரு தொட்டி சுழல்கிறது. தொட்டியின் உட்புறச் சுவர்களில் கீரை செழிக்கிறது. சுவரில் உள்ள துவாரங்கள் வழியே வெளிப்புறம் பக்கவாட்டில் வேர்கள் வளர்கின்றன. இதற்கு உதவ அங்கே புவி ஈர்ப்பு செயற்கையாக உருவாக்கப்படுகிறது. சத்துணவு கலந்த நீர் வேர்களின் மீது தெளிக்கப்படுகிறது.

நோக்கம் என்ன? நிலப்பரப்பு, சூரிய ஒளி, நீர், ரசாயன உரங்கள் இவற்றைக் குறைந்த பட்சமாக உபயோகித்து அதிகப்பட்சமாக உணவு உற்பத்தி செய்வதுதான்.

பீன்ஸும் சோளமும் அருகருகே வளர்க்கப்படுகின்றன. காரணம் பீன்ஸுக்குக் காற்றிலுள்ள நைட்ரஜனைப் பயன்படுத்தி ரசாயன முறையில் உரம் தயாரித்துக்கொள்ளும்



✖ அறுவடையான தக்காளியின் எடை பதிவாகிறது.

ஆற்றல் உண்டு. சோளத்துக்கு இந்தத் தன்மை கிடையாது. சோளத்துக்குத் தேவையான உரத்தை பீன்ஸ் தருகிறது. பீன்ஸ் கொடி சுற்றி வளர சோளத் தண்டு கோலாகப் பயன்படுகிறது!

இதுபோல் பல பரிசோதனைகள். ''எல்லாம் காரிய சாத்தியமானவையே லாபகரமானவையே'' என்கிறது சூழ்நிலை ஆராய்ச்சிக் கூடம்.

இந்த ஆய்வுக்கூடம் மெக்ஸிகோவில் ஒரு புது வகை தாவரத்தைக் கண்டு பிடித்துப் பயிர் செய்கிறது. இதனைக் கால் நடைகள் விரும்பிச் சாப்பிட்டு புஷ்டியாக வளர்கின்றன. இச்செடிகளுக்கு நீர்ப்பாசனமே தேவையில்லை! கடல் நீர்ப்பாசனமே போதும்! இச்செடிகள் உப்பை உள்வாங்கி அழித்து விடுகின்றன! எனவே களர் நிலத்தில் இச்செடிகளைப் பயிர் செய்தால் அது செழிப்பான பூமியாக மாறிவிடுகிறது!

ஓர் அமெரிக்க விவசாய நிறுவனம் மாபெரும் பிளாஸ்டிக் கூரைக் கூடாரங்களை நிறுவி அதனுள் இந்த ஆய்வுக் கூடம் வழங்கிய யோசனைகளின்படி தக்காளியும் வெள்ளரியும் பயிர் செய்தது. நாலரை ஹெக்டேரில் ஆண்டொன்றுக்கு, 22 லட்சத்து 50 ஆயிரம் கிலோ உற்பத்தி ஆயிற்று. சம்பிரதாய விவசாயத்தில் அறுவடையாவதைவிட 20 மடங்கு!

எப்படிச் சாத்தியமாகிறது? சூரிய ஒளி சத்துணவு கலந்த நீர், காற்றின் உஷ்ணம் அனைத்தையும் கூடாரத்துக்குள் சரியான அளவில் கச்சிதமாய்க் கட்டுப்படுத்த முடிவதால்தான். மேலும் புழுதிக் காற்று, புயல், வெள்ளம், பூச்சிகள் முதலியவற்றிலிருந்து பயிர்களுக்குப் பூரணப் பாதுகாப்புத்தர முடிகிறது.

மொத்தத்தில்: கட்டுப்படுத்தப்பட்ட சூழ்நிலையில் கட்டுக்கடங்காத உற்பத்தி.

ஆதாரம்: வாண்டி கிரீன்பர்க் எழுதிய கட்டுரை

தமிழில் : பி. எஸ். எம்.

---







அமெரிக்காவில் புத்தகமாக வெளிவந்த போது எட்டு மில்லியன் பிரதிகளும், பிற நாடுகளில் நாலு மில்லியன் பிரதிகளும் விற்பனையான புத்தகத்தின் கதை திரைப்படமாகியுள்ளது.

கப்பல் மூழ்க, அலெக் ராம்சே என்கிற சிறுவனும், ஒரு அராபிய கறுப்புக் குதிரையும் அதிசயமாக உயிர் தப்பிக் கரை சேர்கின்றனர். இருவருக்கும் இடையே ஒரு பிணைப்பு ஏற்படுகிறது. தீவிலிருந்து இருவரும் சிரமப்பட்டு அமெரிக்காவை அடைகின்றனர். அங்கு குதிரைப் பயிற்சியாளர் ஹென்றி என்பவர் இது நல்ல பந்தயக் குதிரை என்று கணிக்கிறார். ஒரு பந்தயத்தில் அது புயலாக ஓடி அனைவரையும் வியக்க வைப்பது படத்தின் த்ரில் என்றால் அழகிய இயற்கைக் காட்சிகளும் குதிரைக்கும் பையனுக்கு இடையே வளர்ந்த நட்பும் இதம் தரும் மனநிறைவு. குதிரை ஏற்றம் தெரிந்த, நடிப்பார்வமுள்ள ஒரு சிறுவனைக் கண்டுபிடிப்பது தான் படத் தயாரிப்பாளர்களுக்குப் பெரிய சவாலாக இருந்ததாம். இரண்டு வருஷம் ஆயிற்று கெல்லி என்ற சிறுவன் சிக்க.

டி. எம். ஆர்.

# கடுகு பதில்கள்!



⌘ ஸ்ரீநாத் கோபாலன், திருச்சி 16

கே: சில கதைகளில், சிர்ரஸ் மேகங்கள் என்று எழுதுகிறார்கள். அது என்ன சிர்ரஸ்?

ப: மேகங்களைப் பலவிதமாகப் பிரித்திருக்கிறார்கள். அதில் சிர்ரஸ் என்பது ஒரு வகை. வெள்ளை வர்ணத்தை நீலக் காகிதத்தில் பட்டும் படாமலும் குறுக்காகத் தீற்றினாற் போல் இருப்பது சிர்ரஸ். 'தீற்றி விட்டாற்போல் மேகங்கள் இருந்தன' என்று எழுதினால் நாம் புரிந்து கொண்டு விடுவோம். தங்கள் கெட்டிக்காரத் தனத்தைக் காட்டிக் கொள்வதற்காக சிர்ரஸ், க்யூமுலஸ் என்று எழுதுகிறார்கள்.

⌘ ஏ. அலெக்சாந்தர், கோவை 18

கே: ஏழைகள் மாடிக்கு வருவது எப்போது?

ப: வெள்ளம் அவர்கள் குடிசைக்குள் வருகிற சமயத்தில்!

⌘ ந. ராமசாமி, குறிக்காரன் வரிசை

கே: திரைப்படங்களுக்குத் தங்கள் புத்தகங்களின் தலைப்பை எடுத்துக்கொண்டு விடுகிறார்கள் என்று எழுத்தாளர்கள் குறைப்பட்டுக் கொள்கிறார்களே, அவர்களும் இப்படிப் பிரபலமான பெயர்களை உபயோகித்துக் கொள்வதில்லையா?

ப: நியாயங்கள் இரண்டு வகைப்படும். தனக்கு என்று ஒரு நியாயம்; மற்றவர்களுக்கு ஒரு நியாயம். எத்தனை சினிமாப் பாடல் வரிகளை கதைத் தலைப்புக்களாக வந்துள்ளன. கண்ணதாசன், பாரதியார் ஆகியவர்களின் பாடல் வரிகளை உபயோகித்துக் கொண்டிருக்கின்றனர் பல எழுத்தாளர்கள்.

⌘ வி. பிரபாகர், தென்னூர்

கே: ராமராஜ்யம் இன்று தோன்றுமா?

ப: கஷ்டம். ஒரு சாதாரண சைக்கிளுக்கே இரண்டு மூன்று பூட்டுக்கள் தேவைப்படுகின்றன. நாளுக்கு நாள் பூட்டு உற்பத்தி, ஸ்டீல் அலமாரிகளின் விற்பனை, லாக்கர்களின் டிமாண்ட் எல்லாம் அதிகரித்துக் கொண்டு போகின்றன. ராமராஜ்யத்தில் கூற்றம் இல்லை; ஓர் குற்றம் இலாமையால்'. இன்று கோர்ட்டுகளில் லட்சக் கணக்கான வழக்குகள் இருக்கின்றன. இன்று ராமனே ஆண்டாலும் ராமராஜ்யத்தை உருவாக்க முடியாது.



⌘ வெ. ராமசாமி, பண்ருட்டி

கே: நான் கடுகாயிருந்து நீங்கள் ராமசாமியாக இருந்தால் என்ன கேள்வி கேட்பீர்கள்?

ப: 'நான் கடுகாயிருந்து நீங்கள் ராமசாமியாக இருந்தால் என்ன கேள்வி கேட்பீர்கள்?' என்று கேட்பேன்.

⌘ துரை-பால்ராஜ், கோவை 12

கே: மணியான பத்திரிகைக்குக் கதையை அனுப்பி முடிவைத் தெரிந்து கொள்ள ஒன்பது மாதம் காத்திருக்க வேண்டியதாகிறது. இவ்வளவு தாமதம் செய்வதேன்?

ப: ஒரு கதை எழுதுவது ஒரு பிரசவம் மாதிரி என்று யாரோ சொல்லி இருப்பது தெரியாதா? அது மாதிரி கதையைப் படித்து முடிவு தெரிவிப்பதும் ஒரு பிரசவம் மாதிரியோ என்னவோ! அதுதான் ஒன்பது மாதமாகிறது!

⌘ சி.ஜி. பாலசுப்ரமணியன், பெங்களூர் 27

கே: வாரம் ஒரு கேள்விக்காவது சீர்திருத்தத் தமிழில் பதில் தந்தால் என்ன?

ப: முதலில் திருத்தமான தமிழில் எழுதப் பார்க்கிறேன். அப்புறம் சீர் வைத்தால் போகிறது.

⌘ அன்புமணி, நெய்வேலி

கே: கல்கத்தா மிக்கியிடமிருந்து தகவல் வந்ததா, அவர் 'சொந்தமாக' எழுதிய ஜோக்குகளைப் பற்றி?

ப: வட்டமேஜையில் ஓர் அன்பர் தவறுக்கு வக்காலத்து வாங்கியதை பார்க்கவில்லையா?

பரிசு பெறுபவர் :
வி. பிரபாகர்
8-சி, ராமராயர் அக்ரஹாரம்
தென்னூர் 620-017


அரக்கட்டளை ஊழல்கள்


அரசியல் வன்முறை
அரசியல் வன்முறை
கேரளாவில் அமைதியே நிலவுகிறது!
கேரள அரசு
கேரள கூட்டணி அரசில் அங்கம் வகிக்கும் கேரள காங்கிரசும், காங்கிரஸ் (எஸ்)ம் மாநிலத்தில் சட்டம் ஒழுங்கு சீர்குலைந்துள்ளதாக அறிவித் துள்ளன!


குளிருக்கு இதமா இருக்கு! கலைஞர் வாழ்க!
கலைஞரை விடுதலை செய்!
கலைஞரை விடுதலை செய்!

# WORLD WIDE PHENOMENON

''லஞ்ச ஊழல் இந்தியாவில் மட்டுமா இருக்கிறது? அது உலகெங்கும் காணப்படுகிற விஷயமல்லவா? அதன் பாதிப்பு இங்கேயும் இருக்கத்தான் செய்யும். எனவே திரும்பத்திரும்ப லஞ்ச ஊழல் லஞ்ச ஊழல் என்று பேசிக் கொண்டும் சதா அதைப்பற்றியே எண்ணிக்கொண்டும் இருப்பானேன்? இதை நான் எதிர்க்கிறேன்!''

இத்தகைய ஓர் அற்புதமான கருத்தை வெளியிட்டவர் வேறு யாருமல்ல, நமது பிரதமர்தான். இ. காங்கிரஸ் நாடாளுமன்ற உறுப்பினர் கூட்டத்தில்தான் இப்படி ஆழ்ந்த, பொருள் பொதிந்த வார்த்தைகளைப் பேசியுள்ளார் பிரதமர். இதை நாளிதழ்களின் முதல் பக்கத்தில் கொட்டை எழுத்துக்களில் படித்தபிறகு பிரதமரிடம் நமக்கு ஏற்கெனவே உள்ள பெருமதிப்பும், மரியாதையும் பன்மடங்காகப் பெருகிவிட்டிருக்கிறது. அவரது மேதா விலாசத்தை நாம் உணர்ந்து மெய் சிலிர்க்கிறோம்!

இனி ஊழல் சாம்ராஜ்யங்களை நடத்தும் முதல்வர்களும், அமைச்சர்களும் அவர்களுக்குக் கீழே பணியாற்றும் அதிகாரிகளும் கொஞ்சம் கூடக் கவலைப் படாமல் 'என் கடன் லஞ்ச ஊழல் செய்து கிடப்பதே' என்ற உன்னதமான கோட்பாட்டுடன் ஆட்சி புரியலாம். யாராவது 'லஞ்ச ஊழல்' என்று பேச்செடுத்தால் போதும், உடனே, ''அது ஒரு world wide phenomenon. தெரியாதா உமக்கு? உமக்காகவே தெரியவில்லை என்றாலும் பிரதமர் சொல்லியுமா தெரியவில்லை? பூ!'' என்று அலட்சியமாகக் குற்றச்சாட்டை ஒதுக்கிவிடலாம்! பிலிலி கார்ட்டரையும், வாட்டர் கேட்டையும் உதாரணம் காட்டலாம்!

எரிசாராய ஊழல் பற்றி விசாரிக்க நியமனமான ஜஸ்டிஸ் ராய் டில்லியிலிருந்து ஒரிஸ்ஸாவுக்கு மூட்டை கட்டிக்கொண்டு கிளம்பலாம். கரையாளர் தமது வழக்கை வாபஸ் பெறலாம். மகாராஷ்டிரத்தில் சில அசடுகள் முதல்வர் மீதும், அரசு மீதும் தொடர்ந்திருக்கும் வழக்கை நீதிமன்றம் தள்ளுபடி செய்யலாம். ஷா கமிஷன், சர்க்காரியா கமிஷன், மாருதி கமிஷன் தீர்ப்புக்களை சர்வதேசத் தலைவர்களுக்கு அனுப்பி அவர்களைத் துணிவும் தைரியமும் பெறச் செய்யலாம்.

தங்க ஏல ஊழலை விசாரித்த பூரி கமிஷன் அறிக்கையை என்ன செய்வது என்று தவிக்க வேண்டாம். ஊழலே நடக்கவில்லை என்று ஸி.பி.ஐ விசாரணையில் தெரிய வருவதாகக் கூறி, இவ்வாறு உலகோடு ஒத்துப்போகத் தெரியாத ஒரு பிரதமரைப் பாரத மக்கள் சிலகாலம் சகிக்க வேண்டி நேர்ந்ததற்காக அனுதாபக் கண்ணீர் விடலாம்!

கலைஞர் கருணாநிதிக்கு ஜாலிதான். ''அம்மையார் கூறியது போல, லஞ்ச ஊழல் அனைத்து நாடுகளிலும் காணப்படுகிற ஒன்று என்பதை நான் அறிந்திருந்ததால்தான் பால்டிகா - பல்கேரியாவையும் சம்பந்தப்படுத்தி ஊழல் குற்றச்சாட்டு சுமத்தினேன்'' என்று பெருமைப்பட்டுக் கொள்ளலாம்!

இவற்றோடு போயிற்றா? பிரதமரின் அற்புதமான, ஆணித்தரமான வாதம் வேறு பல அமைச்சகங்களை நிர்வகிக்கும் அமைச்சர்களுக்கும் கைகொடுக்கும். இனி பாண்டே, ''எதற்காகத் திரும்பத் திரும்ப ரயில் விபத்து, ரயில் விபத்து என்று புலம்புகிறீர்கள்? விபத்துக்கள் ஒரு world wide phenomenon ஆயிற்றே! அமெரிக்காவில் ஒவ்வொரு ஆண்டும் எத்தனை சாலை விபத்துக்களில் எத்தனை பேர் மடிகிறார்கள் தெரியுமா? அதோடு ஒப்பிடும்போது நம் தேசத்தில் நடக்கும் விபத்துக்களும் மரணங்களும் போதவே போதாதாக்கும்! கூடிய சீக்கிரம் இன்னும் அதிகரித்துக் காட்டுகிறேன்'' என்று உறுதிமொழி அளிக்கலாம்!

''உணவு உற்பத்தியில் தன்னிறைவு கண்ட பிறகும் உணவு இறக்குமதி செய்வார்களா'' என்று யாரும் முட்டாள்தனமாகக் கேட்டுவிடக் கூடாது. அப்படிக் கேட்டால் உடனே உணவு அமைச்சர், ''உணவு இறக்குமதி அகில உலகிலும்

1981 அக்டோபர் 4

துன்மதி புரட்டாசி 18

மலர் : 40 இதழ் : 10



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

காணப்படுகிற நிலவரம்; ஏன் ருஷ்யாவே அமெரிக்காவிலிருந்து உணவு இறக்கு மதி செய்கிறதே'' என்பார்!

''பத்திரிகைகளிலும் சினிமாவிலும் ஆபாசம் மலிந்து விட்டதே'' என்று யாரும் மூச்சு விடமுடியாது! தகவல் ஒலிபரப்புத் துறை அமைச்சர், சர்வதேச பதிலைத் தயாராக வைத்திருப்பார். டென்மார்க்கையும், ஸ்வீடனையும், லண்டனின் ஸோஹோ வட்டாரத்தையும், அமெரிக்க நகரங்களின் சிவப்பு விளக்குப் பகுதிகளையும் பட்டியல் போடுவார்!

ஆர். வி. பாடு குஷிதான். ''விலைவாசிகள் உயர்கின்றனவே; தேசப் பொருளாதாரம் சீரழிகிறதே'' என்று யாராவது முணுமுணுத்தால் போதும், உடனே, ''பணவீக்கம் ஒரு சர்வதேச சமாச்சாரம்; அமெரிக்கப் பொருளாதாரமே தடுமாறுகிறதே'' என்று துருப்புச் சீட்டைப்போட்டு வெட்டுவார்.

''சுதந்திரம் பெற்று 34 ஆண்டுகள் ஆகியும் எழுத்தறிவற்றவர்கள் எண்ணிக்கை அதிகரிக்கிறதே'' என்றால் உடனே கல்வி அமைச்சர் ஆப்பிரிக்க நாடுகளின் ஆதிவாசிகளை அலசுவார்!

இந்தக் கோலாகலங்களிடையே ஒரே ஒரு குறை மட்டும் அகில உலகையும் ஆட்டிப்படைக்கும். அது, ''இதுபோன்ற ஒரு பிரதமர் world wide phenomenon ஆக இராமல் பாரதத்துக்கு மட்டுமே சொந்தமாக இருக்கிறாரே'' என்ற சர்வ தேச மக்களின் ஏக்கம்தான். என்னசெய்ய, அவர்கள் கொடுப்பினை அவ்வளவுதான்!

---

# காதிலே பூ

கலைஞர்களுக்கு நம் அறிந்து மதக் கடவுள்கள் உதவுகிற மாதிரி யாருமே உதவ முடியாது.

பண்டைக் காலத்தில் கவிஞர்கள் கடவுளிடம் பக்தி செலுத்தினார்கள், சண்டை பண்ணினார்கள், காதலித்தார்கள், ஏசவும் செய்தார்கள். நடனக் கலைஞர்கள் இன்றைக்கும் இந்த உத்திகளைக் கையாள்கிறார்கள். நாடகக் கலைஞர்களோ சமுதாயச் சீர்கேடுகளை உணர்த்தக் கடவுளையே பூவுலகுக்குக் கொண்டு வருகிறார்கள். 'எங்களைப் போலவே நீங்களும் கொஞ்சம் அவதிப்படுங்கள். அப்போதுதான் எங்கள் துன்பத்தை நீங்கள் உணரமுடியும்' என்று சொல்லாமல் சொல்கிறார்கள்.



இந்த வரிசையில் அண்மையில் அரங்கேறிய நாடகம், 'காதிலே பூ'. 'நாடகப் பிரியா' அரங்கேற்றும் இதில் பிரமாதமான கதைக் கருவோ, உணர்ச்சி மயமான நாடகமோ இல்லை: ''நீங்கள் சிரிக்கச் சிரிக்க சில வேடிக்கைகளைச் செய்கிறோம், அவ்வளவு தான்'' என்று தலைப்பே உணர்த்துகிறது.

தொனிப் பொருள் இதுமட்டுமல்ல. நமது ஆட்சியாளர்களும் அரசியல் வாதிகளும் நமது காதிலே பூ சுற்றி நம்மை டபாய்த்துக் கொண்டிருக்கிறார்களே, அதையும் நகைச்சுவையாக நாடகம் உணர்த்துவதால் தலைப்பே டபுள் ரோலில் நடிக்கிறது!

போதாக் குறைக்கு எஸ். வி. சேகருக்கும் இரட்டை வேடம். இவரும், எமதர்மனக சுந்தரராமனும் நாடகம் நெடுக மையமேடையை ஆக்ரமித்துக் கொள்கிறார்கள். சாவித்திரி, அனுசூயா ஆகியவர்களாக அனிதாவும், லட்சுமியும் தோன்றி, டபுள் ரோல் ஹீரோக்களை வலம் வருகிறார்கள்.

நிமிஷத்துக்கு ஒரு அவுட்டுச் சிரிப்பையும், மத்தாப்பூச் சிரிப்பையும் தப்பாமல் தோற்றுவிக்கும் ஜி.கே.யின் வசனத்துக்கு உயிர் தருகிறது மேற்சொன்னவர்களின் அனுயாசமான நடிப்பு. கொஞ்ச நேரம் ரசிகர்கள் சிரிப்பதை நிறுத்தி ரெஸ்ட் எடுத்துக்கொள்ள நினைக்கும்போது சித்ரகுப்தன் சிவசங்கரனும், எம். எல். ஏ. ராஜாமணியும் அதற்கு இடம் தராமல் பழிவாங்குகிறார்கள்.

பிறகென்ன? அரங்கம் அதிர்கிறது!

ஒரே ஒரு எச்சரிக்கை: கடவுளரைக் கதையில் பிணைக்கும்போது விரசம் இலைசாககூட எட்டிப் பாராமல் கவனமாக இருக்க வேண்டாமா? ரசிகர் காதிலே சுற்றப்படுகிற பூ மல்லிகையாகவே இருக்கட்டும்; அதில் நாற்றப் பூவைக் கலப்பானேன்?

- குட்டிகிருஷ்ணன்

# வருவான் ராஜகுமாரன்

## ராண்டார் கை



### 1

''என்ன ப்ரியா இது... எப்பப் பார்த்தாலும் டேப்லட், மாத்திரை இன்ஜக்ஷன்னு உசிரை வாங்கறீங்களே... நாள் பூரா உங்களுக்கு வேறே வேலையே இல்லையா...அந்த டாக்டர் ஆனந்த் வேறே.... மூணு நாளைக்கு ஒரு தரம் புதுப் புது பிரிஸ்க்ரிப்ஷனு கிழிச்சுக் கிழிச்சுக் கொடுத்திண்டிருக்கார்... ஏம்மா ப்ரியா இதெல்லாம் எனக்குத் தேவையே இல்லே.... உனக்கு நல்லாத் தெரியும் எனக்கு என்ன தேவைன்னு...''

அவள் ப்ரியாவின் கையிலிருந்த சிகப்பு நிற மாத்திரையை வெறுப்புடன்பார்த்தாள். ப்ரியாவின் மற்றொரு கையில் வெள்ளி டம்ளரில் சூடான தண்ணீர், மாத்திரையோடு சேர்ந்து செல்லும் பயணத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தது.

''ஆன்ட்டி!''

''ஸ்...ப்ரியா! உனக்கு நான் எத்தனை தடவை சொல்றது... ஆன்டின்னு கூப்பிடாதேன்னு... என்னை நீ மம்மின்னுதான் கூப்பிடணும். ஆன்டியாம் ஆன்ட்டி... கேக்கறதுக்கே ஸ்டுபிட்டா இருக்கு... ப்ரியா அந்த ஆன்டிங்கிற வார்த்தை, நீ கூப்பிடற முறை... ஏதோ கான்வென்ட் ஸ்கூல்ல படிக்கிற பொண்ணு பக்கத்து வீட்டுக் கிழவியைக் கூப்பிடற மாதிரி இருக்கு! நா' ஒனக்குப் பக்கத்து வீட்டுக்காரியுமில்லே அப்படி ஒண்ணும் கிழவியுமில்லே!''

''மம்மி!''

''ஆ.... தெட்ஸ் பெட்டர்... ப்ரியா... கூடிய சீக்கிரத்திலேயே நீ என் மருமகளாக வரப்போறே... மம்மின்னு கூப்பிடப் பழகிக்கணும். எங்க குடும்பத்திலே மாமியாரை மம்மின்னுதான் கூப்பிடற வழக்கம், அந்த நாள்லேருந்து!''

''மம்மி டேப்லட்....''

''ம்... நீயும் ஒங்க மாத்திரைகளும்... ப்ரியா வெந்நீரைக் கொண்டா.''

பார்வதி தன் வாயைத் திறந்து மாத்திரையை வெள்ளை படிந்த நாக்கின் மேல் வைத்துக் கொண்டாள். அவள் முகத்தைக் கையில் தாங்கிக் கொண்டு வெந்நீரை மெதுவாக ஊற்றினாள். பார்வதி விழுங்கும்போது அவள் விரல்கள் ப்ரியாவின் முடியைத் தடவியது.

''தேங்க்யூ மை டியர்... நீ நல்ல மருமகளா இருப்பேன்னு எனக்கு அன்னிக்கே தெரியும்.... கிரிஷ் உன்னை ஒரு தடவை பாத்தான்னு.... கிருஷ்...''

பார்வதியின் கண்கள் ஜன்னல் வழியாகப் பங்களாவைத் தாண்டி எங்கேயோ வெறித்துப் பார்க்கத் தொடங்கின. அவள் முகம் மாறியது. உதடுகள் நடுங்கின. உடல் குலுங்க அவள் விக்கி விக்கி அழத் தொடங்கிவிட்டாள். கண்ணீர் கரை புரண்டு முகத்தில் வழியத் தொடங்கிற்று. விம்மல்கள் அதிகமாகித் தலையணையைக் கட்டிக் கொண்டு கதறி அழத் தொடங்கி விட்டாள்.

ப்ரியா சில நொடிகள் பார்த்துக் கொண்டே நின்றாள். அழுகை அடங்குவதாகத் தெரியவில்லை. வேகமாக அந்த அறையின் மூலையிலிருந்த ஒரு நீளமான மேசைக் கருகே சென்றாள். அதன் மேல் ஒரு சிறிய பெட்டி. அந்தப் பெட்டி முழுவதும் சிறிய சிறிய டிராயர்கள். அது சாதாரணமாகச் சில அலுவலகங்களில் குண்டூசி, கிளிப்புகள், ஸ்டேம்ப்கள் – இப்படிப்பட்டவைகளை வைப்பதற்காக உபயோகப்படுத்தப்படும். சென்னையிலிருக்கும் பார்வதி மல்லிக்கின் பங்களாவில் அது மாத்திரைகள், இன்ஜக்ஷன்கள், டாக்டரின் –மருந்துச் சீட்டுகள் போன்றவைகளை வைக்க உதவியாக இருந்தது.

ப்ரியா மேல் டிராயரை இழுத்தாள். அதிலிருந்து ஒரு சின்னப் பாட்டிலை வெளியே எடுத்தாள். அதற்குள்ளே ஆரஞ்சு நிறத்தில் தட்டையான முக்கோண வடிவத்தில் மாத்திரைகள். ஒவ்வொன்றின் மேலும் ரோச் என்ற எழுத்து பதிக்கப்பட்டிருந்தது. ப்ரியா ஒரு மாத்திரையைக் கையில் எடுத்துக் கொண்டு திரும்பிப் பார்த்தாள். பார்வதி இன்னும் அழுது கொண்டே இருந்தாள். ப்ரியாவுக்கு டாக்டர் ஆனந்த் சொன்னது மனத்தில் தோன்றியது.... பார்வதி அம்மா அதிகமாக அழுதாலும், இல்லே, தொடர்ந்து ரொம்ப நேரம் நல்ல மூடுலே இல்லேன்னாலும் இந்த ஹிப்னாடிக்கா டேப்லட் ஒண்ணு கொடு. உடனே மூடு சேஞ்சாயிடும். இந்த மாத்திரையெல்லாம் நம்ம ஊர்லே கிடைக்காதும்மா. நம்ம மேடத்துக்காகவே ஜெர்மனிலேயிருந்து வரவழைச்சிருக்கேன். அங்கே என் நீஸ் இருக்கா. ஃப்ராங்க்

ஃபார்ட்டுலே. இதுக்கெல்லாம் மூடு லிப்டேர்ஸ்ஸுன்னு பேரு அங்கெல்லாம்....

''மம்மி....மம்மி....ப்ளீஸ் அழாதேங்கம்மா. இந்த மாத்திரையைச் சாப்பிடுங்க. ரெண்டு நிமிஷத்திலே ஓ.கே. ஆயிடுவீங்க.''

பார்வதியை அணைத்துக் கொண்டு கொஞ்சல் கலந்த குரலில் பேசினாள். ப்ரியாவின் விரல்கள் பார்வதியின் நரை நிறைந்த முடியை வருடியது. ஆனால் பார்வதி அழுகையை நிறுத்தவில்லை. ஒரு விநாடி அவள் ப்ரியாவின் கையிலிருந்த மாத்திரையைப் பார்த்துவிட்டுத் தன் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டாள்.

''நோ... நோ... இன்னொரு மாத்திரை எல்லாம் எனக்கு வேண்டாம். ப்ரியா குப்பையிலே போடு அதை!''

''ப்ளீஸ்... ஆண்டி..... ஸாரி... மம்மி!''

''டேம் யூ ப்ரியா! நீயும் அந்த டாக்டர் ஆனந்தும்... எங்கேயாவது ஒழிஞ்சு போங்களேன். ஒங்க மாத்திரையும் வேணும் மருந்தும் வேணும்!''

பார்வதி ப்ரியாவின் கையிலிருந்த மாத்திரையைத் தட்டி விட்டாள். அது உருண்டு ஜன்னலுக்குக் கீழே மொசைக் தரையில் போய் நின்று விட்டது.

''ப்ளீஸ்.... மம்மி! நீங்க இந்த மாத்திரையைச் சாப்பிட்டுத்தான் ஆகணும்.''

ப்ரியா ஓடிப்போய் மாத்திரையை எடுத்துக் கொண்டு அதைப் புடவையால் துடைத்துக் கொண்டே திரும்பி வந்தாள்.

''நோ ப்ரியா... நா' வேண்டான்னு சொன்னா வேண்டாந்தான்... விசிறிப் போடு ஒன் மாத்திரையை!''

பார்வதி அசிங்கமாக அலறினாள்.

டிங் டாங்!

பங்களாவின் வாசல் கதவில் அமைக்கப்பட்டிருந்த காலிங் பெல் ஒலித்தது. அதன் ஒலியில் இசை கலந்திருக்கும். அதன் ஒலி என்றாலே பார்வதிக்குப் புத்துணர்ச்சி பொங்கி எழுந்து வரும். அவள் அழுகை ஏதோ விசையைத் திருப்பியது போலத் திடீரென்று நின்றுவிட்டது. அவள் முகம் மலர்ந்தது. புடவையால் கண்களை, முகத்தை வேகமாகத் துடைத்துக்கொண்டாள். தன் முடியைச் சரிசெய்து முடிச்கப் போட்டுக் கொண்டாள்.

டிங் டாங்!

''ப்ரியாபோய்க்கதவைத்திற...சீக்கிரம்... கிரிஷ் வந்துட்டான்! எம் புள்ளே... மைசன் கிரிஷ்!... ஒன்னோட ஃப்யூச்சர் ஹஸ்பெண்ட்! ப்ரிய்ய்யா! சீக்கிரம் ஓடு...ஓடு... கிரிஷைக் காக்க வைக்காதே... ரன்....''

பார்வதி உரத்த குரலில் கத்தினாள். அவள் முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடத் தொடங்கியது.

ப்ரியா வேகமாகப் படுக்கை அறையை விட்டு வெளியேறி வாசற் கதவைத் திறந்தாள்.

''ஹலோ! ப்ரியா!''

''ஹலோ வாங்க டாக்டர் ஆனந்த்... ப்ளீஸ் கம் இன்... நீங்க சரியான நேரத்துலே வந்திருக்கீங்க டாக்டர். பார்வதி அம்மா ரொம்ப மோசமான மூட்ல இருக்காங்க... நீங்க சொன்னீங்களே அந்த ஹிப்னாட்டிக்கா டாப்லெட் அதையும் விசிறி அடிச்சுட்டாங்க... வந்து பாருங்க டாக்டர்...''

ப்ரியா டாக்டர் ஆனந்தைப் பின்தொடர்ந்து நடந்தாள்.

ப்ரியாவுக்கு வயது இருபத்திரண்டு. ஒன்பது வயதுச் சிறுமியாக இருந்தபோதே தன் பெற்றோரைப் பறிகொடுத்து விட்டாள். அவள் தந்தை காஞ்சீபுரத்தில் ஒரு வக்கீல் குமாஸ்தா. அவரும் நோயாளியான தாயும் பிரார்த்தனை செலுத்த ஒரு பஸ்ஸில் ஸ்ரீரங்கம் சென்று கொண்டிருந்தார்கள். வழியில் பஸ் ஒரு லாரியோடு மோதி பயங்கர விபத்தில் சிக்கியது. பதினேழு பேர்கள் விபத்து நடந்த இடத்திலேயே உயிரிழந்தார்கள். ஒரு வாரம் கழித்து ப்ரியாவையும் அவள் தம்பி கோபியையும் ஒரு பணக்கார அத்தை அழைத்துச் சென்று விட்டாள். அவளுக்குக் குழந்தைகள் கிடையாது. கோபியைத் தன் மகனாக ஸ்வீகாரம் செய்து கொண்டாள். ப்ரியாவைச் சென்னையில் படிக்க வைத்தாள். ப்ரியா பி.எஸ்ஸி. பட்டம் பெற்றாள். அந்த நேரத்தில் அத்தை இறந்து விட்டாள். கோபி அத்தையின் சொத்தெல்லாம் மொத்தமாகக் கையில் கிடைத்தவுடன் சிற்றின்பச் சுரங்கத்தில்



நுழைந்து விட்டான். வீட்டை விட்டு வெளியேறுவதைத் தவிர ப்ரியாவுக்கு வேறு எந்த வழியும் தெரியவில்லை. ப்ரியா பல இடங்களில் வேலை தேடி அலைந்தாள். ஒன்றும் சரியாக அமையவில்லை. பிறகு சென்னையை விட்டு ஐம்பது மைலுக்கு அப்பால் உள்ள சென்னூருக்கு வந்து சேர்ந்தாள். சென்னூர் கடற்கரை ஓரத்தில் உள்ள ஓர் அழகான ஊர். கிராமமுமல்ல, பெரிய ஊருமல்ல — அப்படிப்பட்டது சென்னூர். அங்கு ''ஓஷியானிக் இங்கிலீஷ்'' ஸ்கூல் என்ற ஒரு சிறிய பள்ளிக்கூடத்தில் டீச்சராகச் சேர்ந்தாள். ஒரு மாணவியின் வீட்டில் டாக்டர் ஆனந்தைச் சந்தித்தாள். அவர் அவளைப் பற்றி எல்லா விவரங்களையும் தெரிந்துகொண்டார். ஒரு மாதம் கழித்துத் தம் காரை அனுப்பி அவர் வீட்டுக்கு வரவழைத்தார். பார்வதி மல்லிக் என்ற தம் பணக்கார பேஷண்டைப் பார்த்துக் கொள்ள ஒரு படித்த பெண் தேவை — அதை நீ செய்கிறாயா என்று கேட்டார். பங்களாவில் அந்த அம்மாவுடன் வாசம்.... சாப்பாடு மற்ற செலவுகள் எல்லாம் போக மாதம் ஐநூறு ரூபாய் சம்பளம். ப்ரியாவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் திரைப்படங்களிலும் கதைகளிலும் தான் நடக்கும் என்ற எண்ணம் அவளுக்கு.

ப்ரியாவைப் பார்த்த முதல் மூச்சிலேயே பார்வதிக்கு அவளைப் பிடித்து விட்டது. முதல் சந்திப்பிலிருந்தே ப்ரியா பங்களாவில் தங்க ஆரம்பித்து விட்டாள்.

பார்வதி தன் அறுபதாவது வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்தாள். கணவனை இழந்து பத்து வருடங்கள் உருண்டு ஓடிவிட்டன. சென்னையில் ஒரு பிரபல தங்க, வைர, வெள்ளி வியாபாரம் செய்யும் குடும்பத்தைச் சேர்ந்தவள். செல்வத்திலேயே பிறந்து, புரண்டு வளர்ந்தவள். கணவனுக்குப் பிறகு அவளுக்கு அதிக ஆசை கடலின் மீது! நீல நிறக் கடலை ரசிப்பது.... கடல் காற்றில் திரிவது — இவைகளெல்லாம் அவளுக்குப் பிடித்தமான பொழுது போக்குகள். சென்னையில் வளர்ந்து கொண்டு வரும் மனிதக் கூட்டத்தின் நடுவில் வாழ்வது அவளுக்குப் பிடிக்கவில்லை. சென்னூரில் குடியேறிவிட்டாள். அங்கே ஒரு சிறிய பங்களாவை வாங்கித் தனக்குத் தேவையான ! விதத்தில் கட்டி விட்டாள். பணம் என்றுமே அவளுக்குப் பிரச்னையாக இருந்ததில்லை.

அவள் சென்னூருக்கு வந்ததிலிருந்தே ஆனந்த்தான் டாக்டர். அந்த ஊரில் இங்கிலீஷ் வைத்தியம் செய்யும் டாக்டர்கள் குறைவு. உள்ளவர்களில் பிரபலமானவர் டாக்டர் ஆனந்த். வைத்தியம் பார்க்க வந்தவர் வெகு சீக்கிரத்திலேயே நெருங்கிய நண்பராகி விட்டார். பார்வதியைப் பார்க்க நாள்தோறும் வருவார். அவளுடைய அந்தரங்கமான விஷயங்களைக் கூட பேசுவாள். முக்கியமாக கிரிஷ் மல்லிக் விஷயம்...

''டாக்டர் நாங்க ஒரு ஆர்மி ஃபேமிலி''— பார்வதி ஒரு நாள் சொன்னாள். ''என் கணவர் மல்லிக் ஒரு மேஜர்... நெறைய மெடல்கள், அவார்ட்ஸ்,—விருதுகள் எல்லாம் வாங்கியிருக்கார். எங்க ஒரே பையன் கிரிஷையும் ஆர்மிலே சேர்த்துட்டார்... தெட் சஸ் ஏர்ஃபோர்ஸ்லே.... கிரிஷ்... பாவம் கிரிஷ்....''

பார்வதி அழத் தொடங்கி விட்டாள். ஆனந்த் எவ்வளவு தேற்றியும் அவளால் அழுகையை நிறுத்த முடியவில்லை. அழுகைக்குக் காரணம் தெரிந்து கொள்ளச் சில வாரங்கள் தேவைப்பட்டது. கிரிஷ் விமானத்தில் இமய மலைக்கு மேலே பறந்து செல்லும்போது ஏதோ கோளாறு ஏற்பட்டு விமானத்திலிருந்து எல்லோரும் பாரசூட் உதவியோடு வெளியே குதித்துவிட நேர்ந்ததாம். வெளியே குதித்த கிரிஷ் அதற்குப் பிறகு காணப்படவில்லை. அவன் நிச்சயமாக இறந்து விட்டான் என்பதும் தெரியவில்லை.

''டாக்டர் எம்புள்ளே உயிரோடதான் இருப்பான். அவன் செத்துப் போயிருப்பான்னு எனக்குத் தோணலே. பிகாஸ் கிரிஷ் ஒரு எக்ஸ்பர்ட் பாரசூட்டிஸ்ட்.... ப்ளேன்லேருந்து பாரசூட்டோட குதிக்கிறது அவனுக்கு அல்வா திங்கற மாதிரி. எங்கேயோ அந்த மலைப் பிரதேசத்திலே கீழே விழுந்து தலையிலே அடிபட்டு ஞாபக மறதியாலே சுத்திக்கிட்டிருக்கணும்... நீங்கதான் பெரிய டாக்டராச்சே... அம்னீஷ்யா அப்படீன்னு சொல்லுவீங்க இல்லே... இந்த மாதிரி நடக்கிறது உண்டு. என் கிரிஷ் திரும்பி வருவான்... டாக்டர் எனக்கு இந்த உலகத்திலே அவனை விட்டா வேறே யாருமே கிடையாது. மேஜரும் போயிட்டாரு. டாக்டர், கிரிஷ் ரொம்ப நல்லா இருப்பான். மேஜர் மாதிரியே... டாக்டர் நீங்க என் ஹஸ்பெண்டை பார்த்திருக்கணுமே.. ஹாலிவுட் ஸ்டார் க்ளார்க் கேபிள் மாதிரியே இருப்பாரு. கிரிஷும் அப்படித்தான். டாக்டர் நீங்கதான் எப்படியாவது கிரிஷைக் கண்டுபிடிச்சுத் தரணும்... நீங்க பிக் ஷாட்... வேணும்னு டில்லிக்குப் போங்க. மீரட்டுக்குப் போங்க... பணத்தைப் பத்திக் கவலைப்பட வேண்டாம். எனக்கு என் புள்ளே திரும்பி வரதுதான் பெரிசு.... கிரிஷ்...'. கிரிஷ்....''

கிரிஷைப் பற்றிப் பேச்செல்லாம் அழுகையில்தான் முடியும். பார்வதிக்கு உடல் நலமும் சரியாக இல்லை. ரத்தக் கொதிப்பு... சர்க்கரை வியாதி. சில ஆண்டுகளுக்கு

---

சதுரகிரி மலைக்குச் செல்லும் வழியில் உள்ள காட்டில் ஒரு போர்டு காணப்படுகிறது. அதிலுள்ள வாசகம்:

- ஒரு மரம் ஒரு கோடி தீக்
- குச்சிகளை உருவாக்கும். ஒரு தீக்குச்சி ஒருகோடி
- மரங்களை அழித்துவிடும்.

—சிவல்புரி சிங்காரம்

முன்பு ஹார்ட் அட்டாக் வேறே... ஆனந்த் அவளுக்கு நாள்தோறும் இன்சுலின் இன்ஜக்ஷன் கொடுப்பார். இதற்கு மேலாக 'மல்லிகாலயா' என்ற பெயரைக் கொண்ட அத்தனை பெரிய பங்களாவில் தனியாக இருப்பாள். சமையல்காரி சரஸ்வதி தேவைப் படும்போதுதான் இரவில் தங்குவாள். மனநிலை சரியில்லாததனால் அவளுக்குத் தூக்கமே வராது. அதற்காக இரவில் தூக்க மாத்திரை. நரம்புத் தளர்ச்சியைத் தடுப்பதற்காகப் பகலில் மூன்று முறை மாத்திரைகள். சில நேரங்களில் நாள் முழுதும் அழுதுகொண்டே இருப்பாள். அப்போதெல்லாம் எந்நேரமானாலும் சரஸ்வதியின் அழைப்பின்பேரில் ஆனந்த் தூக்க மருந்து இன்ஜக்ஷன் போட்டுவிட்டுப் போவார்.

ப்ரியா பார்வதியுடன் தங்க ஆரம்பித்தவுடன் நிலைமை ஓரளவுக்கு மாறியது. பார்வதியின் மனநிலையும் முன்னேற்றமடையத் தொடங்கியது...

''என்ன டாக்டர் இன்னொரு இன்ஜக்ஷனா? யூ நோ ஐ ஆம் ரியலி சிக் ஆஃப் யுவர் டிரக்ஸ்... ஹார்ட்டுக்கு டேப்லெட்ஸ்... சுகருக்கு இன்சுலின் இன்ஜக்ஷன்... நர்வ்ஸுக்கு டேப்லெட்ஸ்.... அதுக்கப்புறம் தூக்கத்துக்கு மருந்து வேறே. நீங்களே சொல்லுங்க டாக்டர் இதெல்லாம் என்னைப் பைத்தியமாக்கிடாது?'' டாக்டர் இன்ஜக்ஷன் போடுவதற்குத் தயார் செய்ய, பார்வதி முணு முணுத்தாள். அவருக்குப் பிடித்தமான ஆரஞ்சு ஜூஸை ஃப்ரிஜ்ஜிலிருந்து எடுத்து வர ப்ரியா உள்ளே சென்றிருந்தாள்.

''டாக்டர், ஒங்க இன்ஜக்ஷன்ஸ், பில்ஸ் அது இது ஒண்ணும் ப்ரயோஜனமில்லே. உங்களுக்கு நல்லாத் தெரியும் எனக்கு என்ன தேவைன்னு. மீரட், டேராடூன், கர்க்கி அங்கெல்லாம் இருந்த பழைய பார்வதி மல்லிகா நான் மாறணும்னு ரெண்டு விஷயம் நடக்கணும்.''

''ரெண்டா!''

''எஸ் டாக்டர். ரெண்டு. ஏர்ஃபோர்ஸ் லேர்ந்து என் புள்ளை கிரிஷ் திரும்பி வரணும்.''

''அது தெரியும். ரெண்டாவது என்னது?''

''கேளுங்க டாக்டர்... ப்ரியா என்னோட மருமகளா வரணும்!''

டாக்டரின் புருவங்கள் ஆச்சரியத்தில் உயரத் தாவின.

''அப்படியா... ரியலி!.... இது புது நியூஸா இருக்கே. எ கிரேட் ப்ளெஸண்ட் சர்ப்ரைஸ்!''

''டாக்டர் என் கிரிஷ் திரும்பி வந்தவுடனே முதல் வேலையா இவங்க ரெண்டு பேருக்கும் முடிச்சுப் போட்டுடப் போறேன். டாக்டர், ப்ரியா ரொம்ப நல்ல பொண்ணு. கிராஜுவேட்... குணம்... எல்லாம் இருக்கு அண்டு தேறா ஸ்வீட்! டாக்டர், என்னுடைய மொத பேரக் குழந்தையைப் பார்க்கணும்னு எவ்வளவு ஆவலா இருக்கேன் தெரியுமா! டாக்டர்... மொதல் கொழந்தை பேரன்தான். நோ டௌட்... அவனும் ஓர் ஆர்மி ஆபீஸரா வந்து.... ம்.. அதுவரைக்கும் நா எங்க இருக்கப்போறேன்'' பார்வதி பலமாகச் சிரித்தாள். (தொடரும்)




தூர் தர்ஷனும் ஆல்இந்தியா ரேடியோவும் அடிக்கடி தடங்கலுக்கு வருந்திவிட்டுப் போகட்டும். ஆனால் நீங்கள் உங்கள் தினசரி நடவடிக்கைகளில் மூன்றுமணி நேரம் தடைப் பட்டதற்கு சந்தோஷப்படுவீர்கள்! எப்போது தெரியுமா? அகில இந்திய ரேடியோ கோவையில் வேளாண்மைப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து நடத்தும் அறிவியல் தொழில் நுட்பப் பேரரங்கைச் சுற்றிப் பார்த்து வரும்போது!

வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் கம்பீரமான கட்டிடத்தின் கீழ் எங்கெல்லாம் இடம் இருக்கிறதோ அங்கெல்லாம் மனிதத் தலைகள். மனித வரிசைப் பாம்புகள். சுற்றிலுமுள்ள கல்லூரிகள், பள்ளிகளுக்கெல்லாம் சௌகரியமாய் விடுமுறை விட்டதால் யூனிஃபார்மில் குழந்தைகள். அதட்டும் ஆசிரியர்கள். கணவர் தத்தம் மனைவி சகிதமாகவும், குழந்தைகள் தத்தம் பெற்றோர் சகிதமாகவும் இளைஞர் தத்தம் இளைஞியுடனும் ஆர்வமாய்க் காத்திருந்தார்கள்.

முதலில் தெரிந்தது 'ஆப்பிள்' செயற்கைக் கோளின் மாதிரி வடிவம். அதன் இரண்டு இறக்கைகளும் பிரிந்திருக்க (அட!) சுமார் 20 அடி–உயரத்தில் மகா கம்பீரமாக நின்றுகொண்டு வரவேற்றது. இறக்கைகளின் ஒருபுறத்தில் ஸோலார் ஸெல்கள். மறுபுறத்தில் 'லக்ஷ்மி மில்ஸ்'!

அருகிலேயே எஸ்கலேட்டர் – நகரும் மாடிப் படி. அதில் நகர்ந்து மேலே சென்றவர்கள் ஆப்பிள் பார்த்து பின், குழந்தைகள் 'சொய்ங்ங்' என்று மறுபுறம் சறுக்க, பெரியவர்கள் நிதானமாய்ப் படி இறங்கினார்கள். சத்தமில்லாமல் ஒரு கார் பேட்டரியில் மௌன சந்நியாசி போல் ஓடியது.



✖ மின்சார கார்

இன்னொன்று கார் போலவும் அல்லாமல், படகு போலவும் அல்லாமல், விமானம் போலவும் அல்லாமல், மூன்றும் கெட்டான் உருவத்தில் தரையிலிருந்து 12 இஞ்ச் உயரத்தில் நகர்ந்தது. இந்தியாவின் முதல் 'ஹோவர் கிராஃப்ட்'. நீர் மேல், நிலம் மேல், எதன் மேலும் வாயு மெத்தை மேல் ஓடும் வாகனம்.

பி. எஸ். ஜி. தொழில் நுட்பக் கல்லூரியின் அரங்கில் 'போனி-எம்'-மின் ரஸ்புடின் பாட்டைப் புரோகிராம் செய்து பாடிப் பாடி மனப்பாடம் செய்து கொண்டிருந்தது மைக்ரோப்ராஸஸருடன் இணைக்கப்பட்ட ஒரு ஸ்பீக்கர். இன்னொரு மைக்-ப்ராஸஸர் டி.வி. திரையில் கோலம் போட்டு, இரும்ப வேறு கோலம் போட்டுத் தாய்க் குலத்தைத் தன் பக்கம் இழுத்தது.

கோவை அரசினர் தொழில் நுட்பக் கல்லூரி அரங்கின் முக்கிய தயாரிப்பு ஓட்டு எண்ணும் கம்ப்யூட்டர். இவ்வருடக் கல்லூரித் தேர்தலுக்காக வெற்றிகரமாகப் பயன் படுத்தப்பட்ட இதன் வடிவமைப்பே மிக நளினம். கள்ள வோட்டுப் போட முயற்சி செய்தால் 'கய்யா முய்யா' என்று தனக்குத் தெரிந்த எலக்ட்ரானிக்ஸ் பாஷையில் கத்தி ஆர்ப்பாட்டம் செய்கிறது. மொத்த ஓட்டுக்களையும் வேட்பாளர்கள் பெற்ற தனித் தனியான ஓட்டுக்களையும் தேர்தல்




✖ தேர்தலுக்கு கம்ப்யூட்டர்



✕ ''ஆம்பி''யின் மாதிரி வடிவமும் எஸ்கலேட்டரும்

முடிந்த அடுத்த விநாடியில் சூடாய்த் தரு கிறது. கல்லூரித் தேர்தலின் 'த்ரில்'லையும் வெகுவாய்க் குறைத்து விடுமே! சே!

வயல்வெளிகளில் சில காற்றாடிகள் சுற்றிக் கொண்டிருந்தன. வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் 'விவசாய இயந்திரவியல்' துறை தலைவர் டாக்டர் ஸ்வாமிநாதன் விளக்கினார்:

''மின்சாரம் கிடைக்காதபோது மோட்டார் பம்ப்களை உபயோகிக்க முடியாது. ஆனால் காற்று எப்போதுமே கிடைக்கிற இயற்கைச் சக்தி. அதை அடிமையாக்கிக் கொள்ளலாம். காற்றின் திசை மாறும் போது ஏற்படும் சக்திமாற்றத்தைக்கொண்டு காற்று ஒரு சிலிண்டருக்குள் அழுத்தமாய் அடைக்கப்படுகிறது. இதற்குத்தான் இந்தக் காற்றாடி. அழுத்தப்பட்ட காற்றைப் பயன் படுத்தி.....'' நீர் இறைத்துக் காட்டினார்; மருந்தும் தெளித்தார்.

''சாண எரிவாயுவைப் பயன்படுத்தியும் நிறையக் காரியங்களைச் செய்யலாம். தேவை யான அளவு சாணம் கிடைக்காதபோது என்ன செய்வது? பார்த்தீனியம் என்கிற விஷச் செடியை — தமிழகம் முழுவதும் காடு போல் வளர்ந்திருக்கும் தேசிய செடி!— நறுக்கிச் சாணத்துடன் கலக்கும்போது மீதேன் வாயு வெளியாகிறது. இதை....''

ஒரு டீசல் என்ஜினில் செலுத்தி ஓட்டிக் காட்டினார். 50 ரூபாய் செலவாகிற ஒரு ஸ்டவ்வில் செலுத்திச் சமையல் செய்தார்.

பக்கத்தில் ஒரு மாணவர் சாணம் கலக்கிய தண்ணீரில் கார்பன் குச்சிகள் வைத்து (1.25 Volts Cell) மின்சாரம் தயாரித்து' ரேடியோ வைப் பாடவைத்துக் கொண்டிருந்தார்.

வானம் பார்த்துப் படுத்திருந்தன, சூரிய சக்தியைக் கிரகிக்கும் Black Body கள். கிரகித்துத் தண்ணீர் சுடவைக்கவும், சமையல் செய்யவும் பயன்படுத்தலாம். சூரிய சக்தியை மையத்தில் குவிய வைத்துத் தண்ணீரைச் சூடாக்கும் கண்ணாடிகள்.

சகோதரிகளுக்கு எனில் சந்தோஷமாய் விளக்கினார்கள் நம் இளைஞர்கள்.

ஸ்பிக் அரங்கத்தில் சிமெண்ட் தொழிற் சாலையின் மாதிரி வடிவம் செயல்பட்டது. (அது எப்படி ப்ளாக் மார்க்கெட்டு வருகிறது என்பதையும் விளக்கியிருக்கலாம்) கூட்டமே இல்லாத சில அரங்குகளில் முதன்மை வகித் தது ''சத்துணவு''. நம் மக்கள் இதைப் பார்க்காமல் தவறு செய் கிறார்கள். அட, இவர்களும்தான் attractive ஆக ஏதாவது செய்யக் கூடாது? (சத்துணவே தரலாமே!)

தனக்கும் ஒரு அறையைப் பிடித் துக் கொண்டது அணு சக்திக் கழ கம். பெரிய பெரிய போட் டோக்கள். ஹோமி பாபா படத் துக்குப் பெரியதாய் மாலை வாங் கிப் போடலாம். ஆனால் கல் பாக்கம்தான் மர்மக் கதையாகவே இருக்கிறது. நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன் தன் கதையை இயங்கும் பொம்மை டிரக்குகள்.



✕ ஹோவர்கிராப்ட்.

நகரும் கன்வேயர் பெல்ட்கள், பொம்மை யான மெஷின்கள் மூலம் விளக்கியது.

மறுபடியும் வேளாண்மைப் பல்கலைக் கழகம்! பயிர்கள், பழங்கள் என்று அற்புத மான display. போட்டோவில் காய்பிடித்து நின்ற தென்னைக்குத் திருஷ்டி சுற்றிப் போட வேண்டும். அப்படியே பப்பாளிக்கும். ராஜராஜன், கிரிக்கெட் பால். — முந்திய பெயர் நெல் வகை. பிந்தியது சப்போட்டா.

சில குறைகளையும் சொல்லத் தோன்று கிறது. ஆல் இந்தியா ரேடியோக்காரர்கள் தம் கைகளில் ஒரு பவர்புல் மீடியாவை வைத்துக் கொண்டு விளம்பரத்துக்காக உபயோகித் தார்களே தவிர, Organisation போதாது. இன்னும் சிறப்பாகச் செய்திருக்கலாம். நீங்கள் தடுக்கி விழுந்து எழுந்தால் உங் களுடன் சேர்ந்து இரண்டு மூன்று அரங்கங் களின் உபகரணங்கள், விளக்கமளிப்பவர்-களும் எழுந்திருப்பார்கள். நெருக்கியடித்துச் செய்திருக்கிறார்கள்.

இப்படிப் போக வேண்டும் என்பதற்காக அம்புக் குறி அடையாளங்களை வைக்கவேண் டும். மிக அவசியம். மறந்தார்கள்.

தர்ம கூட்டம். இதனால் விளக்கங்களைக் கேட்க முடியாமல் கண்ணால் பார்த்த திருப்தியுடன் போய்க் கொண்டே இருக்க வேண்டி வந்தது. கண்காட்சியை இன்னும் சில நாட்கள் நீடித்திருக்கலாம். இருந் தாலும், விஞ்ஞானம் பற்றி ஒரு விழிப்புணர்ச் சியை மக்களிடையே உருவாக்க முயன்றது நல்ல காரியம்.

● வ.வே.சு.வின் 'ஓ இரயிலே!' நல்ல ஆழமான — தடம்புரளாத கவிதை — குறிப்பாக அந்தக் கடைசி இரண்டு வரிகள் கண பொருத்தம்.
மதுரை-16 ஆர். வி. பிரசாத்

● 'ஓ இரயிலே' கவிதையை வாணியம்பாடி விபத்தையொட்டி விவேகானந்தா கல்லூரி தாவர இயல் பேராசிரியர் வ.வே.சு. இயற்றினார். அந்த விபத்தில் வ.வே.சு.வின் சகோதரன் கணேசனும், அவரது புது மனைவியும் உயிர் தப்பினார்கள். இந்தக் கவிதையை எழுதி முடித்த சில நாட்களுக்குள்ளேயே தமிழ்நாடு எக்ஸ்பிரஸ் விபத்து நிகழ்ந்து விட்டதோன்று மிகவும் துக்கப்பட்டார் வ.வே.சு.
எப்பொழுதும் சிரித்துக் கொண்டும், மற்றவர்களைச் சிரிக்க வைத்துக் கொண்டும் இருக்கும் வ.வே.சு. இவ்வளவு துக்கமாகவும் சீரியசாகவும் எழுத வேண்டுமானால் அவர் மனம் எவ்வளவு பாதிக்கப்பட்டிருக்கும்என்று ஊகிக்கலாம்.
சென்னை-90 டாக்டர் (ஸ்ரீமதி) அங்குலி

● மதிப்புக்குரிய மாண்புமிகு ஆர்.வி.யை இப்படி வாங்கு வாங்கென்று தலையங்கத்தில் வாரி—இருக்கக் கூடாது! குறைந்தபட்சம் அவர் நமது தமிழ்நாட்டுக்காரர் என்பதற்காகவாவது விட்டிருக்கலாம்!
பெங்களூர் ப. மூர்த்தி

● அன்புடன் கொஞ்சம் வம்பு இழுத்தாலும் இழுத்தீர்கள். வலம்புரியார் பிடி பிடி என்று பிடித்து விட்டாரே! நீரும் சுற்றி வளைத்து மூக்கைத் தொடாமல் நடந்தது சிறு தவறு எனினும் பெருந் தன்மையாய் வருத்தம் தெரிவித்துக் கல்கியின் பாரம்பரியப் பெருமையைக் காப்பாற்றி விட்டீர்கள்.
விருத்தாசலம் இ. ப.—பெரியநாயகி

● வேலை யில்லாப் பட்டதாரிகளுக்காகத் தாங்கள் செய்யும் சேவைக்குத் தங்களை எப்படிப் பாராட்டுவதென்று தெரிய வில்லை. பட்டதாரிகள் இதை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று நம்புகிறேன். ராமருக்கு அணில் பாலம் கட்ட உதவியது போல் 'கல்கி'யின் சிறிய பணி.
கூத்தாநல்லூர் கே. என். எஸ். மணியன்

● டைரக்டர்களைக் கொண்டே 'காமெடி ட்ராக்' அமைத்திருக்கும் யுக்தி புதியது. மனம் விட்டுச் சிரிக்கும்படி இருந்தது.
கண்ணம்பாளையம் பொன் ஜெயசிங்

● ரமாமணி சுந்தர் ரொம்ப ஹாஸ்யமாக எழுதியிருக்கிறார். அருமையான கண்டு பிடிப்பு. அந்தக் காலத்து நாடோடி, தேவன் துமிலன், சுத்தா, பூர்ணம் விஸ்வநாதன் (கல்கிகூட) போன்றவர்களை நினைவுபடுத்துகிறார்.
சென்னை-90 ப. லக்ஷ்மி

● அகஸ்தி எழுதிய ''நாலு சுவர்களுக்குள் நம் சாம்ராஜ்யம்'' ஒரு நட்சத்திரக் கதை.




நான்கு பக்கத்தில் ஒரு நாவலுக்குரிய கதை அம்சத்தோடு இருந்ததை நிச்சயமாக 'நாலு' பேர் பாராட்டாமல் இருக்க மாட்டார்கள்.
தூத்துக்குடி-6 இரணியல் 'கவி'

● நாலு சுவர்களுக்குள்ளே நம் சாம்ராஜ்யம்—சிறுகதைக்கு ஜமாலின் ஓவியம் அருமை. குருவை மிஞ்சிய சிஷ்யராகி விடுவார் போல் இருக்கிறது.
சென்னை-39 திருமதி நாராயண ராவ்

● கலைஞர் படம் என்பதற்காக பாரபட்சம் காட்டாமல் மற்ற படங்களை விமர்சனம் செய்வது போலவே 'மாடி வீட்டு ஏழை'யை ஒரு பிடி பிடித்த நளினி சாஸ்திரியைப் பாராட்டுகிறேன்.
மதுரை-1 ஆர். கண்ணன்

● ''பணம், பணம் என்று அலையாமல் குடும்பத்தையும் கவனிக்க வேண்டும், இதுதான் குடும்பத் தலைவனின் பொறுப்பு'' என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டும் ''மாடி வீட்டு ஏழை'' படத்தை இரண்டு கலைஞர்களுக்கும் சரிவு என்று கூறியிருக்கும் நீரும் உம் விமர்சனமும்! போய்யா தரை டிக்கட் கேஸ்!
மேட்டுப்பாளையம் மு. கல்யாணசுந்தரம்

● சமூகத்தில் அன்மைக் கலவரங்களின் போது வன்செயல் காரணமாக அழிவுற்ற யாழ்ப்பாணம் பொதுசன நூலகத்தை மீள்வித்துப் புனரமைப்பதற்குத் தமிழ்கூறு நல்லுலகின் நல்லாதரவை எதிர்நோக்குகிறோம்.
ஒரு கோடியே அம்பது இலட்சம் ரூபாய் செலவாகுமென மதிப்பிடப்பட்டுள்ளது. இதுபோன்ற ஓர் உன்னத நோக்கத்துக்குத் தங்களால் இயலக் கூடிய தொகையை உதவுவதற்குத் தாங்கள் விரும்புவீர்கள் என நாம் எதிர்நோக்குகின்றோம்.
யாழ்ப்பாணம் இலங்கை வங்கியில் ''யாழ்ப்பாணம் பொதுசன நூல்நிலைய நம்பிக்கை நிதி'' 2893ஆம் எண் கணக்கு ஆரம்பிக்கப்பட்டுள்ளது. எமக்கு அறிவித்து, தங்கள் உதவித் தொகைகளை வங்கிக்கே நேரடியாக அனுப்பி வைப்பீர்களாகில் நன்றி பாராட்டுவோம்.
யாழ்ப்பாணம் இராசா விசுவநாதன்
மாநகர முதல்வர்

புதிய

# ஃபேப்

டிட்டர்ஜெண்ட் கட்டி

## வெளுக்கிறது உங்கள் துணிகளை அதிகத் தூய்மையாக

அதிக வெண்மையாக

அதிக பிரகாசத்துடன்

**விசேட பளிச்சிட வைக்கும் சக்தியை உள்ளடக்கிய உன்னத ஃபார்முலா.**

புதிய ஃபேப் டிட்டர்ஜெண்ட் கட்டியின் சக்திவாய்ந்த நுரைவளம் அழுக்கை ஊடுருவிச் சுத்தம் செய்து விடாப்பிடியான அழுக்குகளையும் அறவே அகற்றுகிறது.
அதன் விசேட பளிச்சிட வைக்கும் சக்தி வெள்ளைத்துணிகளை அதிக வெண்மையாக்குகிறது— வண்ணத்துணிகளை அதிகமாக பிரகாசிக்க வைக்கிறது—
உங்கள் துணிகளுக்கு தூய்மை கலந்த புதுமணம் தருகிறது.
அது சக்கசியற்றது—எனவே அதிக துணிகளை வெளுக்கிறது— உங்களுக்கு சிறந்த சிக்கனம்.

**இணையில்லா வெண்மையும், ஈடில்லா பிரகாசமும் தரும் சலவைக்கு—புதிய ஃபேப் டிடர்ஜெண்ட் கட்டி।**



# சிதம்பர ரகசியம்

வ. தேனப்பன்

யாருடன் ஊர் போனால் சுவாரஸ்யமாக இருக்கும்? போகிற பயணம் ஹனிமூன் என்றால் மனைவியோடு போக வேண்டும். பக்தி நோக்க மென்றால் சாமியாரோடு போக வேண்டும். கலர் பார்ப்பதே நோக்கமென்றால் கல்லூரி மாணவர்களுடன் போக வேண்டும்.

ஒரு ஊரின் வரலாறு, இலக்கியம், புதுமை வளர்ச்சி பற்றி யெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டு மென்றால்... தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி அவர்களுடன் போக வேண்டும்.

ஆமாம். அந்த அரிய வாய்ப்பு எனக்குக் கோடைக்காலக் கல்வெட்டுப் பயிற்சியின் போது கிடைத்தது. தமிழகம், கேரளம் ஆகிய இரண்டு மாநிலங்களிலும் உள்ள முக்கியமான பெரிய கோவில்கள் எல்லாவற்றுக்கும் அழைத்துச் சென்றார்கள். நமக்குத் தெரிந்த இடத்தில் இதுவரை தெரியாத செய்திகளை அவர் வெள்ளமாய்க் கொட்டுகிறார்! அவர் கொட்டியபோது அள்ளிய முத்துக்களில் சிதம்பரம் பற்றிய ஒருசில வற்றை மட்டும் கோத்துத் தருகிறேன்.

“சிதம்பர ரகசியம் என்றால் என்ன தெரியுமா?” என்று கேட்டார். நாங்கள் அமைதியாக இருந்தோம். நிறை குடம் தளும்பாதது போல் நாங்களும் இருந்ததாக எண்ண வேண்டாம். வெற்றுக் குடமும் தளும்பாதல்லவா?

“உங்களுக்குத் தெரியுமா தெரியாதாங்கிறதே ஒரு ரகசியமாக இருக்கே! சும்மா சொல்லுங்க. நடராஜர் சன்னதிக்குப் பக்கத்திலே பார்த்தீங்களே, என்ன பார்த்தீங்க?” எங்கள் மனத்தை அகழ்வாராய்ச்சி செய்தார்.

“ஒண்ணுமில்லே!” என்றேன் நான்.

“வெரி குட். நீங்கதான் ரொம்ப அறிவாளி!” என்று என்னைத் தட்டிக் கொடுத்தார்.

‘என்னது? பார்த்தது ஒண்ணுமில்லேன்னு வெரி குட்டுங்கிறாரே! குட்டு வைக்கிறாரா? வஞ்சப் புகழ்ச்சியா?’ என்று திருதிருவென்று விழித்தேன். ராஜேந்திர குமார் பாணியில் சொன்னால் ‘பே’ என்று விழித்தேன்.

“தம்பி தேனப்பனுக்கு சைவ தத்துவமெல்லாம் தெரியுமோ?” என்று கேட்டார். புகழ் வருகிறபோது ஏற்றுக் கொள்வது-தானே சாமர்த்தியம்? அழகர் கோயில் மாடு போலத் தலையாட்டினேன்.

“பார்த்தீங்களா? இவரை மாதிரி ஆர்வமாய்ப் படிக்கணும். உண்மையிலே கடவுளுக்குன்னு ஒரு உருவம் இல்லே. இந்த உருவங்களெல்லாம் மனிதனின் கற்பனையில பிறந்தவைதான். ஆண்டவன் பஞ்ச பூதமாக இருக்கான். வாயு வடிவத்திலே — உருவம் தெரியாம — அருவமாகவும் இருக்கான். அவனுக்குன்னு வடிவம் ஒண்ணுமில்லேங்கறதுதான் சிதம்பர ரகசியம்!” என்றார்.

என்னை எல்லோரும் பெருமையாகப் பார்த்தார்கள். நான் வெட்கத்தோடு தலை குனிந்து கொண்டேன். தொடர்ந்து நாகசாமி கூறிய அரும் பெரும் கருத்துக்கள் கவனத்தை ஈர்த்தன.

“கோயில்னு சொன்னாலே, அது சிதம்பரத்தைத்தான் குறிக்கும். ஏன்னு இது மாதிரிப் பழைமை வரலாறு, பெரும் கலைச் சிறப்பு, சிறந்த இலக்கியம், உயர்ந்த தெய்வ தத்துவம் நிறைந்த கோயில் வேற எதுவும் இல்லே.”

“நடராஜருடைய உருவ அமைப்பிலே இருக்கிற தத்துவமும் அழகும் வேற எந்தச் சிலையிலேயும் கிடையாது. உடுக்கை உலகினுடைய தோற்றத்தைக் குறிக்கிறது. அபயஹஸ்தக் கை, உலகத்தை ஆண்டவன் காப்பாத்துவான்கிறதைக் குறிக்கிறது. கையிலே இருக்கிற நெருப்பு உலகின் அழிவைக் குறிக்கிறது. தூக்கி ஆடும் கால் முக்திக்கு வழியைச் சொல்கிறது. இவ் உலகின் தோற்றம், வளர்ச்சி, அழிவு எல்



✖ ஸ்ரீ நடராஜர் கோயில் கோபுரம்



✕ ஸ்ரீ நடராஜர் கோயிலின் ஆகாயத் தோற்றம் எதிர்ப்புறம் தெரிவது வடக்கு கோபுரம்

வார்த்தையுமே இந்த உருவ அமைப்பு குறிப்பாக விளக்குகிறது'' என்றார். நாங்கள் பெருமூச்சு விட்டோம். ''இதுக்கே பெருமூச்சு விட்டால் எப்படி? நடராஜ தத்துவத்தைப் பத்தி அமெரிக்காவிலே மூனு மணி நேரம் பேசினேன். அசந்துபோயிட்டாங்க!'' என்றார்.

ரஷ்யாவில் கூட ஒவ்வொரு ஊரிலும் நடராஜர் சிலை வைத்திருக்கிறார்களாம்! ''இந்தக் காலத்திலேதான் இது பெரும் புகழோட இருக்கோன்னு நினைக்கக் கூடாது. அந்தக் காலத்திலே சோழர்களும், பாண்டியர்களும் விஜயநகர மன்னர்களும் கூட நடராஜரை வழிபட்டுப் போற்றிப் பாதுகாத்திருக்காங்க'' என்றார். இரட்டைப் பெருமூச்சு விட்டோம்.

நடராஜரின் உடுக்கைச் சத்தத்திலேயிருந்துதான் முதன் முதலில் ஒலிகள் பிறந்தன. அதிலேயிருந்துதான் எழுத்துக்களும் இலக்கணமும் மொழியும் தோன்றின. இதைத்தான் பாணினி 14 சூத்திரங்களில் இலக்கணமாகப் பாடியுள்ளார் என்று கூறி அந்தச் சூத்திரங்களைப் பாடிக் காட்டினார். உண்மையிலேயே உடுக்கையை அடிப்பதைப் போன்ற ஒலியுடன் அந்த சம்ஸ்கிருதச் சுலோகங்கள் அமைந்திருந்தன.

''ஒன்ஸ்மோர்!'' கேட்டோம்.

''விடிகாலை நேரத்தில் மோர் கேட்கக்கூடாது!'' என்று ஜோக் அடித்து விட்டார்.

எங்களுடன் வந்த நண்பர் குமார அழகப்பன் ரொம்ப சந்தேகப் பேர்வழி. அவர் தமது நெடுநாளையச் சந்தேகத்தைக் கேட்டார்: ''இங்கு யார் முதலில் பொன் வேய்ந்தது?''

''எதற்கு? உங்கள் வீட்டிலேயும் வேய வேண்டுமா?'' என்று ஒரு நண்பர் கேட்டார்.

''பொன்னுலதானே காயுறோம்! அப்புறம் எங்கிட்டு வேயுறது? பேசாம ஐயா சொல்றதைக் கேளுங்க!'' என்றார்.

கி. பி. 850ல் விஜயாலயன் மகன் ஆதித்த சோழன்தான் முதலில் பொன் வேய்ந்தான். பிறகு அவன் மகன் பராந்தகன் பொன் வேய்ந்தான். முதலாம் இராஜ ராஜன் இங்கிருந்த பதிகங்களை எடுத்து வெளி விட்டான். சேக்கிழார் இங்கிருந்துதான் பெரிய புராணம் பாடினார்.

'பரத நாட்டியம் பற்றி எழுதியவர் யார் தெரியுமா?'' என்று கேட்டார்.

'பத்மப் பிரியா. இல்லே. பத்மா சுப்பிரமணியம்!' என்று ஆளுக்கு ஒருவரைக்கூறினர்.

''பத்மா பரத முனிவர் ஆகியோர் மட்டும் இல்லை. பரத நாட்டியக் கலையை எழுதியவர்கள் சிற்பிகளும் தான். கிழக்குக் கோபுர வாசலில் 108 கரண முத்திரைகளும் சிலைகளாக வடிக்கப் பட்டிருக்கின்றன. பாருங்கள்'' என்றார்.

''இது பத்மினி டான்ஸ் மாதிரி இருக்கே! அட இது கவர்ணமுகி சர்க்கஸ்



✕ திரு ஆர். நாகசாமி

டான்ஸ் மாதிரி இருக்கே'' என்று கூறிக் கொண்டே பார்த்தோம்.

''கர்ண முத்திரை இப்படியா இருக்கும்? எங்க ஊர்க் கர்ணம் வேற மாதிரியில்ல முத்திரை போடுவாரு!'' என்று ஜோக் அடித்தார் ஒருவர்.

ஒருவர் தில்லானா பாடிக் கொண்டே ஆடிப் பார்த்தார். ''நீங்கள் தினமும் சாதகம் பண்ணுகிறீர்களா?'' என்று கேட்டேன்.

''தினமும் சாதம்தான் பண்ணுகிறேன்'' என்றார். சிரிப்பு வெடித்தது.

அடுத்து — கோயிலுக்கு வாருங்கள் என்று கை கூப்பி வணங்கி அழைக்கும் கோபுரங்களைப் பார்த்தோம். ''இந்தக் கோபுரங்களில் எவ்வளவு தத்துவங்கள் இருக்கின்றன என்று யாருக்காவது தெரியுமா?'' எனக் கேட்டார்.

எல்லோருமே 'பே' என்று விழித்தோம்.

''உங்களுக்குத் தெரியவில்லை. ஆனால் ஒரு வெளி நாட்டுக்காரருக்கு முழுக்க முழுக்கத் தெரிந்திருக்கிறது!''

''என்ன?''

''ஆமாம். ஜேம்ஸ் ஹால்டு என்ற ஆக்ஸ்போர்டு யுனிவர்ஸிட்டி மாணவர் இந்த நான்கு கோபுரங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் வாங்கியிருக்கிறார்'' என்றார்.

அவர் உள்நாட்டுக்காரராகி விட்டார். நாம்தான் அயல் நாட்டுக்காரராகி விட்டோம்!

அக்காலச் சமயப் பொதுமையைக் காட்டுவது போலச் சிவன் கோயிலுக்குள் கோவிந்தராஜப் பெருமாள் கோயில் இருக்கிறது.

சிவகாமி அம்மனுக்குத் தனிக் கோயில் இருக்கிறது. அதன் சுற்றுப் பிராகாரச் சுவரில் அக்கால ஆடவர்கள் என்னென்ன விதமாக வெல்லாம் தாடி வைத்துக் கொண்டிருந்தார்கள் என்பதற்குச் சான்றாகப் பல்நூறு சிற்பங்கள் நின்று கொண்டிருந்தன. என்ன அருமையான ஃபாஷன்! என்று சிலைகளின் தாடியைத் தடவி விட்டபடி வெளியே வந்தோம்.

ஊருக்குக் கோடியில் காளியம்மன் கோயில் இருக்கிறது. பார்க்கவே பயமாக இருக்கும் என்றார்கள்.

''அப்ப வேண்டாம் ஸார். அப்புறம் என் மனைவி ஞாபகம் வந்துவிடும்!'' என்றார் ஒருவர்.

''ஏன்? பகவான் ராமகிருஷ்ணர் தன் மனைவியைக் காளியின் மறு வடிவமாகத் தானே கருதினார்?'' என்று கேட்டேன்.

''அவராவது மறுவடிவம்னார். எம் மனைவி சாட்சாத் பத்ரகாளியேதான் ஸார்!'' என்றார். இடியின் சத்தத்தை விட எங்கள் சிரிப்பொலிதான் சிதம்பரத்தில் அதிகமாகக் கேட்டது.

# எனக்காக காத்திரு..

ரொம்ப நாள் காக்கவைத்த காமிரா மேன்-டைரக்டர் நிவாஸின் சோதனை முயற்சி இது. சோதனைக்குள்ளாவது நம் பொறுமை!

குங்-பூ நடன டைட்டிலுடன் படம் ஆரம்பம். கராத்தே டோஜோவில் நாயகர்கள் அறிமுகம். நிமிர்ந்து உட்கார்ந்தால் பிறகு ஒரே புஸ் வாணம். ஆரம்பக் காட்சிகளில் சந்தர், தன் தங்கையின் மரணத்துக்குக் காரணம் விஜய் என்று நினைத்து, அவன் வாழ்க்கையில் குறுக்கிடும் பெண்களுக்கும் தன் தங்கையின் கதியை ஏற்படுத்துவேன் என்று குளுரைத்துப் பிறகு கடைசி இரண்டு ரீலில் தோன்றித் தன் சபதத்தை நிறைவேற்றிப் பின் அழிந்து போவதுதான் கதை.



கராத்தேயையும் காதலையும் கலந்த விசித்தக் கோளாறினால் படம் முக்கி முனகுகிறது. எல்லா நடிகர்களும் நடிக்க ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டுக் கஷ்டப்படுத்துகிறார்கள். அரைலிட்டர்விளக்கெண்ணெயைக் குடித்த மாதிரி முகத்தை வைத்துக் கொண்டு ஏமாற்றிப் . பிழைத்துக் கொண்டு, ஒழிந்த நேரங்களில் படத்தில் வரும் எல்லாப் பெண்களுடனும் கனவில் டூயட் பாடும் வேலை விஜய் ஆகத் தோன்றும் சுமனுக்கு, பானு சந்தருடன் சில காட்சிகளிலும், தொந்தல் பயில்வான்களுடன் பல காட்சிகளிலும் நன் முகக் கராத்தே செய்கிறார், முகத்தில் எந்த பாவமும் இல்லாமல். குளிரில் முகமெல்லாம் வீங்கிப்போன சுமலதா பார்த்தாலே பரிதாபம். ரொம்ப தன்னம்பிக்கையோடு நடிப்பவர் கைடு ஜனகராஜ் மட்டுமே.

படப்பிடிப்பு ரொம்ப சுத்தம். நிஷா படகில் தனியாகப் போகும்போது காமிரா மேன் நிவாஸ் படா வேலை காட்ட, டைரக்டர் நிவாஸ் நிம்மதியாய்க் குறட்டை விடுகிறார். பல காட்சிகளில் காரெக்டர்களின் முகங்கள்; பிரேமுக்கு வெளியே இருப்பதும் புதுமையா என்ன? நேபாளமும், காஷ்மீரும் இளையராஜாவின் பின்னணி இசையும், ஆங்கிலப் படம் பார்ப்பது போல் இருந்தாலும்.... காத்திருந்ததென்னவோ வீண்தான்.

—சிந்து — ஜீவா

# STANROSE

## ட்ரான்ஸ் ப்ரிண்ட் கவர்ச்சி

உங்கள் அழகிய கழுத்து
முதல் மெல்லிய கணுக்கால்
வரை அழகுக் கவர்ச்சி
யூட்டும் அற்புத ரகசியம்
அறிந்திடும் ஸ்டேன்ரோஸ்.

உடல் அழகினை
உயர்த்திடும் உன்னத
சேலைகள் உடுப்புத்
துணிகளின் செழுமை
—அத்தனையும்

**ட்ரான்ஸ்ப்ரிண்ட்**
மகிமை.

ஆடவர் பெண்டிருக்கான
அழகிய ஸ்டேன்ரோஸ்
பாலிஷர்கள், சூட்டிங்குகள்,
ஷர்ட்டிங்குகள்,
சேலைகள், உடுப்புத் துணிகள்.

**ஸ்டேன்ரோஸ்**
**துணிகள்**








everest/81/SM/332-tm.

# தபஸ்

போட்டிக் கதை–5

வாதூலன்

அடி வயிற்றில் ஜிலீர் என்று தண்ணீர் இறங்கினாற் போல் ஒரு விநோத உணர்வு ஏற்பட, வித்யா திடுக்கிட்டுக் கண் விழித்தாள்.

என்ன பயங்கரமான – இல்லே அருவருப்பான கனவு!

சிவகாமி அத்தை கண்களில் குரூரம் தெரியச் சிரித்துக் கொண்டே வித்யாவை நோக்கி மெல்ல வருகிறாள். வித்யாவுக்குக் காலேயிலிருந்தே நல்ல பசி. சாப்பிடவே யில்லே. சொல்லப்போனால் சாப்பிடும்படியாக ஏதும் இல்லே. "ஏம்மா வித்யா? கறிக் கொழும்பு ஆக்கியிருக்கேன். சாப்பிட்டுத் தான் பாரேன்!" என்று வலிய வரவழைத்துக்கொண்ட கனிவுடன் சிவகாமி கேட்கிறாள்.

வித்யாவுக்கு அந்த வார்த்தைகளைக் கேட்கவே குமட்டுகிறது. "வேண்டாம். வேறு ஏதாவது.... பசி...."

"ம்... உனக்காக ஸ்பெஷலா சிக்கன் ரோஸ்ட் பண்ணி...." என்று சொல்லிக் கொண்டே சற்றுத் தள்ளிக் கூடையிலிருந்த கோழியைத் தலே கீழாகப் பிடித்து ஆராய்கிறாள் சிவகாமி.

அவளுக்குக் குமட்டுகிறது.

வித்யா கண் விழித்தாள். சே என்ன கனவு! எல்லாம் இந்தச் சிவகாமி அத்தை வந்ததினால்தான்.

அருகில் பார்த்தாள். தலேயணையை அணைத்துக் கொண்டு சாதுவாய்ப் படுத்துக் கொண்டிருந்தான் முகுந்தன். எத்தனே நல்லவர்! வந்த அன்றைக்கே "என்டா முகுந்தா! கல்யாணமானவுடன் ரொம்ப மாறிப் போயிட்டயாமே? அந்த நாளிலே கறி மீனெல்லாம் விரும்பிச் சாப்பிடுவே" என்று கேட்டாள் சிவகாமி.

பிறகு வித்யாவை உடல் முழுவதும் ஆராய்ந்து "ம்... அப்படி யொண்ணும்.... ரதிக் களே இல்லேயே! எப்படித்தான் பிடிச்சயோ!" (அத்தை பெண்ணே முகுந்தன் மணக்கவில்லே என்கிற கோபம் என்று வித்யாவுக்குப் பிற்பாடுதான் தெரிய வந்தது.)

"அத்தே!" என்றான் முகுந்தன் கண்டிப்புடன். "நீ எவ்வளவு நாள் வேணுமானலும் இரு. ஆனல் 'அந்த' வாசனே துளிக்கூட வரக்கூடாது. சொல்லி விட்டேன்."

ஆனல் சிவகாமி கொஞ்சமாவது அரண்டு போக வேண்டுமே? "ஆமாம்... அது போயிருந்தா மட்டும் உன்னே அவங்க ஏத்துக்கப் போறாங்களாக்கும்! வித்யாவோட அம்மா செத்துப் போனபோது நீ போயிருந்தயே? உனக்குக் கிடைச்ச மரியாதை எனக்குத் தெரியாதா?"

முகுந்தன் வதனம் மாறியது. மறு நிமிடமே புன்னகையை வரவழைத்துக் கொண்டு "அத்தை! எனக்குக் கல்யாணமான பிறகு இப்பத்தான் முதல்லே உன்னேப் பார்க்கிறேன். அப்படியே நில்லு. நமஸ்காரம் பண்ணறேன்" என்றான்.

"உனக்கு நல்லா அவங்க பாஷை வந்துடுத்து" என்றாள் அத்தை கிண்டலாக. "உனக்குப் புத்தி கெட்டுப் போச்சா இல்லே அவங்களுக்குக் கெட்டுப் போச்சான்னு தெரியலே—"

முகுந்தன் வித்யாவிடம் தனியாக "அத்தையின் சுபாவமே அப்படித்தான். என்னவோ கோபம். நீ எதையும் மனசிலே வெச்சுக்காதே" என்றான்.

"பரவாயில்லே. ஆனு அந்தச் சமையல் செய்ய மாட்டாங்களே? நேத்து ஏதோ கோழியோ என்னவோ விலே பேசினங்க."

"அது உன்னேச் சீண்டுவதற்காக இருக்கும். பயப்படாதே. என் மேல் உனக்கு நம்பிக்கை இல்லேயா?"

"இருக்கு. என்னே மன்னிச்சுடுங்கோ" என்று முகுந்தன் மடியில் முகம் பதித்துக் கொண்டாள்.

'உனக்குப் புத்தி கெட்டுப்போச்சா? அவளுக்குக் கெட்டுப் போச்சா?' என்ற அத்தையின் வார்த்தைகள் வித்யாவின் மனத்தை நெருடிக் கொண்டே இருந்தன. யாருக்குக் கெட்டுவிட்டது? வித்யா யோசித்து யோசித்துப் பார்த்தாள். தெரியவில்லே. சற்றுப் பெரிய குடும்பத்தில் (நாலு பெண் இரண்டு ஆண்) பிறந்த கடைக்குட்டி அவள். அழகு கொஞ்சம் மட்டுத்தான். நிறம் கறுப்புத்தான். அப்பாவும் மூன்று பெண்களுக்குக் கல்யாணம் பண்ணின களைப்பில் தளர்ந்து போயிருந்தார்.

இப்படியே போய்க் கொண்டிருந்தால் தனக்குக் கல்யாணம் ஆகாமலே போய் விடுமோ என்கிற பயம் பிடித்துக்கொண்டு விட்டது. அக்காமார்களைப் போல் தனக்குக் களேயும் கிடையாது.

இந்தச் சமயத்தில்தான் அவள் முகுந்தனைச் சந்தித்தாள். எக்ஸிபிஷன் ஒன்றில் பரிச்சயம் ஏற்பட்டது. பிறகு அலுவல் தொடர்பாக (தற்காலிக வேலே) நெருக்கம் மீறி, காதலாக முகிழ்த்தது! மலர்ந்தது

''என்னைக் கல்யாணம் செய்துகொள்ள உனக்குப் பூரண சம்மதமா?'' என்று சிரித்துக்கொண்டே கேட்டான் முகுந்தன்.

''ஏன்? நான் கொடுத்து வைச்சிருக்கணுமே!''

முகுந்தன் இன்னும் பலமாகச் சிரித்தான். ''வித்யா! ஒரு விஷயம் சொல்லணும். நான் உங்க ஜாதி இல்லை. ஆர்க்காட் முதலியார்.''

''என்ன!'' என்று திகைத்தபடி அவன் கைகளைப் பிடித்துக் கொண்டாள் வித்யா. அவளுக்கு அழுகையே வந்து விட்டது.

''ஆமாம், வித்யா! நிஜமாகத்தான். உனக்குத் தெரியும்னு நெனைச்சிருந்தேன். ஆனால் வித்யா—உன்னை நான் நேசிக்கிறேன்!''

ஒரு வாரம் — வித்யா தன் மனசுடன் போராடினாள். தான் முகுந்தனை மணந்து கொண்டால் தனக்குப் பிறகு யார் வாழ்க்கை யாவது குலைந்துபோகும் என்ற கவலையும் கிடையாது. அவள்தான் கடைசி.

சம்மதம் தெரிவித்து விட்டாள்.

திருமணம் திருநீர்மலையில் எளிமையாக நடந்தது. இரண்டு பேர் வீட்டிலும் அனுமதி கிடைக்காததால் நிறையக் கூட்டம் இல்லை. குமார் அண்ணா வந்திருந்தான். வித்யாவிடம் அவனுக்குப் பாசம். ''என்ன வித்யா! இப்படிப் பண்ணி விட்டாயே!'' என்றான், கண்களில் நீர் மல்க.

''அவரோட சுபாவம் தங்கமானது அண்ணா. நான் கொடுத்துவைச்சிருக்கணும்!''

''இதோட 'லைஃப்' முடியப் போற தில்லையே. அப்புறம் அவன் கூட நீ எப்படி ஆயுசு பூராவும் இருக்கப் போறே?''

''எனக்கு நம்பிக்கை இருக்கு. ம்... அப்பா எப்படி இருக்கார்?''

''எல்லாருக்கும் கோபம்தான். அம்மா படுத்த படுக்கை.''

கல்யாணம் ஆகி ஒரு வருடம் ஆகி யிருக்குமோ என்னவோ? திருச்சியிலிருந்து தந்தி வந்தது — அம்மா இறந்து போய்விட்ட தாக. டூரிஸ்ட் டாக்ஸி பிடித்துப் போய்ச் சேரும்போது எல்லாம் முடிந்து விட்டது.

அம்மா இல்லை. உயிரற்ற உடலைக்கூடப் பார்க்க முடியவில்லை. அழுவதற்கு மனிதர்கள்தான் இருந்தார்கள். அவர்கள் கூட வித்யாவின் முன்னால் அழுவது பாவம் என்று எண்ணியோ என்னவோ அழுகையை நிறுத்திக் கொண்டார்கள். எல்லாவற்றிலும் வித்யாவை ஒதுக்கி ஒதுக்கி வைத்தார்கள்.

''எல்லாம் என்னால்தானே வித்யா? உன் அம்மா முகத்தைக்கூடப் பார்க்க முடியாமல் போனது என்னால்தானே?'' என்று வருந்தினான் முகுந்தன்.

கடைசியில் விடை பெற்றுச் செல்லும் சமயத்தில் அவளாலேயே பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அக்கா, மன்னி, அப்பா, மாமா எல்லாருக்கும் நமஸ்காரம் பண்ணினாள்.

''போறது போ. உனக்கும் முதலியார் பாஷை வந்துடுத்து. 'வாங்க''போங்க'ன்னு. சாப்பாடும் பழக்கம் ஆயிடுத்தோல்லியோ?'' என்றார் மாமா எகத்தாளமாக.

வித்யா கணவனைத் திரும்பிப் பார்த்தாள். முகுந்தன் முகம் சலனமற்று இருந்தது.

''எல்லாரும் தமிழ்த்தானே பேசறோம்? ஊருக்கு ஊர் பேச்சு வேறுபடறதில்லையா?''

''உன் கிட்டே லேசாப் பூண்டு வாசனை வீசித்து அதுதான் கேட்டேன்!'' என்று சிரித்தார் அவர். ''போகட்டும் போ. ஆத்துக் காரரை விட்டுக் கொடுக்காமப் பேசறே!'' மறுபடியும் ''ஜாதிப் பழக்கம் போகுமா என்ன? எல்லாக் கர்மத்தையும் சாப்பிடுத்



தானே ஆகணும்?'' என்று போலியாகக் கண்ணைத் துடைத்துக் கொண்டார் மாமா.

'மாமா! வாயை மூடுங்கோ. ஜாதியைப் பற்றிப் பேச உங்களுக்கு என்ன யோக்யதை இருக்கிறது? உங்க பெண் அமெரிக்காவில் அசல் பிராமணனைக் கல்யாணம் செய்து கொண்டாலும் என்னவெல்லாம் சாப்பிடுகிறான் என்று தெரியாதா? நீங்களும் சேர்ந்து சாப்பிட்டுச் சப்புக் கொட்டிவிட்டு வந்தீர்களே! இன்னொரு ஜாதியைக் குறை சொல்லஉங்களுக்கு என்னயோக்கியதை இருக்கிறது?'' என்று படபடவென்று சொல்லித் தீர்த்துவிட வேண்டும் போல் உடல் முழுதும் பரபரத்தது. ஒரு முறைப்பு முறைத்துவிட்டு விறுவிறுவென்று முகுந்தனுடன் சேர்ந்து போனாள்.

''மாமா பேசினதுக்கு என்னை மன்னிச்சுடுங்கோ. என்னாலேதானே உங்களுக்கு அவமானம்?'' என்று மனசார முகுந்தனிடம் மன்னிப்புக் கேட்டாள்.

''சேச்சே! இதெல்லாம் எதிர்பார்த்தது தானே? யார் என்ன சொன்னாலென்ன? நாம ரெண்டு பேர் ஒத்துமையா இருந்தால் போதும்.''

''அந்த மாமா! அவர் வந்து அமெரிக்கா போய் – 'ஹாட் டாக்ஸ்'னு என்னென்னு? சாப்பிட்டாராமே! இங்கே வந்து வேஷம் போட்டு''என்று பல்லைக் கடித்துக்கொண்டே விருந்தாள் வித்யா.

''விடு வித்யா! சே, விவ் இட்!''

அங்கு திருச்சியில் மாமா இருந்து கூத்து அடித்த மாதிரி – அதற்குப் பரிகாரம் மாதிரி– இப்போ சிவகாமி அத்தை குத்திக் குத்திக் காண்பித்துக் கொண்டே இருந்தாள். முகுந்தனின் அப்பா அம்மா இவர்களைத் தூண்டி விட்டுக் கொண்டே இருந்தாள். ''என்ன ராதா இது! ஒரு நாள் கூட கறி கிடையாதா? தினமும் குரங்குத் தீனிதானு? அவன்தான் தவசி ஆயிட்டான். பாப்பாத்தியைக் கல்யாணம் பண்ணிட்டு! உங்களுக்கு என்ன?'' என்பாள்.

ரிசர்வேஷன் கிளார்க்: குடும்பத்திலே ஒவ்வொருத்தருக்கும் ஒரு பெட்டியிலே தனித்தனியா ரிசர்வேஷன் கேட்கறீங்களே ஏன்?

பிரயாணி: 'ஒரு குடும்பமே அடியோடு பலி'ன்னு பேப்பரிலே வர்றதை நான் விரும்பலே. அது ரயில்வேக்கு ரொம்பக் கெட்ட பேரை ஏற்படுத்தும்.

- ஆர். மரகதம்



வித்யா தவித்துப் போவாள். தன் கணவரைத் 'தவசி' என்கிறாளே அத்தை? உண்மையில் தான்தான் தபஸ் செய்வது போன்ற உணர்வு ஏற்பட்டது. ஐம்புலன்களும் அடங்கி எதையுமே காதில் போட்டுக் கொள்ளாது. அப்படியே காதில் விழுந்தாலும் மனத்தில் ஏற்றுக் கொள்ளாமலிருப்பது – எத்தனை அசாத்தியமான காரியம் என்று தோன்றிற்று. பல்லைக் கடித்துக் கொண்டு வீட்டில் வித்யா வளைய வந்தாள்.

முகுந்தனின் தங்கை கமலிதான் ஓர் ஆறுதல் வித்யாவுக்கு. ''என்ன அண்ணி ஆடி பதினெட்டுக்கு வித விதமாகச் சமையல் செய்வீர்களாமே?எனக்குச் சொல்லிக்கொடுங்களேன்!''

''உன் அத்தை ஏதாவது சொன்னால்?''

''அவங்க கிடக்காங்க. சொல்லுங்க.''

கமலி பெரியவள் ஆனாள். கிடுகிடுவென்று அதற்கான ஏற்பாடுகள் தொடர்ந்து நடந்தன. வீட்டில் குபுகுபுவென உற்றார் உறவினர்கள், தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் வந்து குழுமிவிட்டார்கள். கெட்டி மேளம் கொட்டி, தலையில் தண்ணீர் விட்டு ஆரத்தி எடுத்த பின்னர், கமலியைத் தனியாக ஓர் அறையில் உட்கார்த்தி வைத்தார்கள்.

இப்போது இங்கு வித்யா முற்றிலும் அந்நியமானாள்.

முகுந்தன்தான் வாசல் முன் நின்று எல்லாரையும் வரவேற்றுக் கொண்டிருந்தான்.

''என்னு? நான் ஏதாவது செய்யணுமா?''

முகுந்தனுக்கு என்ன எரிச்சலோ அன்று! ''நீ சும்மா இருந்தால் போதும்.''

வித்யாவின் கண்களில் நீர் மல்கி விட்டது. ''சொல்லிக் கொடுங்களேன். தெரிஞ்சுக்கறேன்.''

''இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு அழறே? உனக்கு ஒரு 'காம்ப்ளெக்ஸ்' வந்துவிட்டது.''

இதற்கு மேலும் வார்த்தையை வளர்ப்பது உசிதமல்ல என்று எண்ணி வித்யா மௌனமானாள். கூட்டத்தோடு கூட்டமாகச் சேர்ந்து கொண்டாள்.

கமலியை அலங்கரித்து மணையில் அமர்த்தினார்கள். தன்னால் இந்த வைபவத்தில் பங்கு ஏற்க முடியவில்லையே என்று வித்யாவுக்குத் துக்கமாக இருந்தது.

இதற்காகவே காத்திருந்தவள் மாதிரி சிவகாமி அத்தை புறப்பட்டுச் சென்றாள். சும்மா போகவில்லை. முகுந்தன் தாயாரிடம், ''என் ராதா! முகுந்தனுக்குக் கல்யாண மாகி ரெண்டு வருஷம் இருக்காது?'' என்றாள்.

''ம்....இருக்கும்.''

''இன்னும் பூச்சி பொட்டு வரலியே? முழுகாம இருக்காளா?''

''ஒன்றும் இல்லே. என்ன செய்யறது?''

''பொறுத்துப் பார் வேணுமானா....'' என்று ஏதோ காதோடு சொன்னாள். வித்யாவால் கணிக்க முடிந்தது. தன் பெண்ணை

இரண்டாம் தாரமாக முகுந்தனுக்கு முடிக்க முயற்சி செய்கிறுள்....

வித்யாவுக்கு வருத்தமும் இல்லே, சந்தோஷமும் இல்லே. கமலியின் 'சடங்கு'க்கு அப்புறமே, தான் முற்றும் வேறுபட்டவள் என்கிற எண்ணம் அவளுக்கு ஏற்பட்டு விட்டது. தனக்கும் முகுந்தனுக்கும் இடையே ஒரு பள்ளம் விழுந்து விட்டது போல் உணர்ந்தாள். குழந்தைப் பாக்கியமும் இல்லே. இது என்ன வாழ்வு! எண்ணெயும் தண்ணீரும் போல் — ஒட்டாமல்.

''சாப்பிட வாயேன் வித்யா! என்ன யோசனே?'' என்று முகுந்தன் அழைத்தான்.

''ஞாயிற்றுக் கிழமைன்னு லேட்டாத்தான் சாப்பாடு. ஆனல் இவ்வளவு நேரமா? காலேயிலேர்ந்து ஒண்ணுமே சாப்பிடலேயாம். அம்மா சொன்னுள்... என்ன ஆச்சு வித்யா உனக்கு?''

வித்யா எழுந்தாள். உடல் தள்ளாடியது. வயிற்றைப் புரட்டின மாதிரி இருந்தது. குளியலறைக்குப் போகு முன்னரே பாதி நடையிலேயே குபுக்கென்று வாந்தி எடுத்து விட்டாள்.

''என்ன ஆச்சு?'' என்று ஓடி வந்தாள் முகுந்தனின் தாயார்.

''டாக்டரைக் கூப்பிடட்டுமா?'' என்றுன் முகுந்தன்.

''ஒண்ணுமில்லேன்னு, குளிச்சு ரெண்டு மாசம் மேலிருக்குமே'' என்றுள் வித்யா வெட்கம் மேலிட.

அவளுக்கு உடல் சிலிர்த்தது. இனி பிரச்னே இல்லே. ஒரு பிடிப்பு; நீரில் தவித்தவளுக்கு ஒரு பாதுகாப்புக் கிடைத்துவிட்டது போல் இருந்தது. குழந்தை எப்படி இருக்கும்? இரண்டு ஜாதியிலும் உள்ள மேன்மையானவற்றை மட்டும் பெற்றுக் கொண்டு பிறக்கட்டும்... இனி கவலேயே இல்லே.

திடீரென்று வித்யாவைப் பயம் பிடித்தது. கடவுளே! இரண்டிலும் உள்ள விரும்பத்தகாத அம்சங்களே மட்டும் கொண்டு பிறந்து விட்டால்? பிறக்கும் குழந்தை என்ன ஜாதி? யோசித்துப் பார்க்கும்போது பிரச்னேகளே இனிமேல்தான் ஆரம்பிக்கப் போகிறதுஎன்று வித்யாவுக்குத் தோன்றியது.

பிரச்னேகளேச் சமாளிக்க முடியுமா? குத்தல்களேயும் கேலிகளேயும் கிண்டல்களேயும், ஏளனங்களேயும் பொறுத்துக் கொள்ளும் அளவுக்கு மனப் பக்குவம் வருமா?

கடவுளே! வரவேண்டுமே?

முகுந்தனின் மடியில் முகத்தைப் புதைத்துக்கொண்டு வித்யா விசித்து விசித்து அழுதாள்.

''நோ நோ! அழக் கூடாது. எவ்வளவு நல்ல நியூஸ்!'' என்று ஆதரவாக முகுந்தன் அவள் முதுகைத் தடவிக் கொடுத்தான்

---

கறுப்பு வெளுப்பில் வந்துள்ள, 10 வருடம் முந்தின கதை கொண்ட படம். அப்பாவை போலீஸ் பிடித்துச் செல்ல — குழந்தையைப் பெற்றுவிட்டு அம்மா சாகிருள். அக்கா—இரு தம்பிகள். அதில் ஒருவன் பிரிந்துவிடுகிறன். ஒருவரை யொருவர் தேடிக் கொள்கிருர்கள். தம்பி தேடிப் பிடித்து வில்லனின் மகளேயே காதலிக்கிறன். இன்னெரு பையன் திருடி ஏழைகளுக்கு உதவுகிறன். கடைசியில் தன் மகளேயே வில்லனுக்காகக் கடத்தி வரும் பரிதாப நிலே அப்பாவுக்கு வர — அடிதடி சண்டைக்குப் பின் பார்த்தவர்களுக்கு நன்றி கூறிப் படம் முடிகிறது.

அக்கா வடிவு(க்கரசி) எல்லா வயசிலும் ஒரே வடிவாய் இருக்கிருர். (தம்பி) விஜய் பாபு செயற்கையாய்க் காதலிக்கிருர். பிக்பாக்கெட் சரிதா — சுருளி கோஷ்டிக்கும் பிக்பாக்கெட் (தம்பி 2) விஜய குமாருக்கும் அடிக்கடி ஏற்படும் தொழில் மோதல் ரஸிக்கும்படிஉள்ளது. விடாக்கொண்டன்கொடாக்கண்டன் பாணி. சரிதா வழக்கப்படிகரெக்டா முடிக்கிருர். சுருளி பாதியில் காணமல் போனதன் காரணம் புரிகிறது. ஆபத்து, சண்டை, சமயங்களில் சொல்லி வைத்த மாதிரி வரும் விஜயகுமார்.

ரவி பாபுவின் காமிரா கலர் இல்லாமலும் சோபிக்கிறது. இசை வி. குமார். வசனம் பல இடங்களில் காணமல் போகிறது. (குறிப்பாக எம். ஆர். ஆர். வாசு வர இடங்கள்) படம் பார்ப்பவர்களும் அடிக்கடி காணமல் போகிருர்கள்.

| | | |
|---|---|---|
| கொடுப்பது | ரூ | 1—00 |
| கிடைப்பது | | |
| (நடிப்பு 0-15 | | |
| கேமரா 0-15) | | 0—30 |
| | | —— |
| தண்டம் | | 0—70 |

காலம் ஒரு நாள் மாறும் — இதுபோன்ற படங்கள் கூட!

—நளினி சாஸ்திரி

# காலம் ஒரு நாள் மாறும்



# ஸ்ரீ வெங்கடேஸ்வர(பாலாஜி) பஞ்சரத்னமாலா எல்.பி.5

## எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் இசைத்திருக்கும் ஸ்ரீ அன்னமாச்சாரியார் ஸங்கீர்த்தனங்கள்.



### அன்னய்யாவின் அனவரத கான காணிக்கை

வெங்கடேசப் பெருமாளுக்குத்தம்வாழ்நாள் முழுதும் இடைவிடாது பாடல்களைப்படைத்தளித்துக் கொண்டிருந்த 15-ம் நூற்றாண்டின் மாபெரும் வாக்கேயக்காரரான தாள்ளபாக்கம் அன்னமாச்சாரியரின் ஸங்கீர்த்தனங்களையும் மற்ற துதிப்பாடல்களையும் பிரபலப்படுத்தும் பொருட்டுத் திருமலை–திருப்பதி தேவஸ்தானத்தினர், கிராமஃபோன் கம்பெனியின் ஒத்துழைப்புடன் வெளியிட்டுவரும் ஐந்து எல்.பி. ரிகார்டுகளில் இது ஐந்தாவது இசைத்தட்டாகும்.

### இசைத்தறியில் இணையற்ற நெசவு

அன்னய்யா என அன்புடன் அழைக்கப்படும் அன்னமாசாரியர் தம்மை சாஸ்திரீய ஸங்கீத ஸாஹித்யகர்த்தர் என்று பிரகடனப்படுத்திக்கொள்ள விரும்பினாரில்லை. பெரிதாகத்தமக்கெனச் சிஷ்ய பரம்பரை ஒன்றை உண்டாக்கிக் கொள்ளவும் விழைந்தாரில்லை. அவர் தம் மனம்போல் பாடிக்கொண்டே யிருந்தார். அவ்வளவுதான். 'ஏன் பாடினார்?' என்றால், பாட்டு தானாக அவருக்கு வந்தது. அதனால் பாடினார். ரஸாயன விஞ்ஞானத்தில் சிலபொருட்கள் தாம் மாறாமல் உள்ளபடி இருந்துகொண்டே மற்ற பொருட்கள் கூடிக்கலந்து மாறுவதற்கு உதவி செய்வது போல இவர் தம் நிலை குலையாதிருந்துகொண்டே கர்நாடக ஸங்கீத வளர்ச்சியில் மாபெரும் ஆழ்ந்த மாறுதல்களை உண்டாக்கிவிட்டார். ஆம், நமக்குத் தற்போது பழக்கமாகிப்போன பல்லவி–அநுபல்லவி–சரண அமைப்புக்கொண்ட திட்டவட்டமான கீர்த்தன ரூபத்துக்கு ஆதி சிற்பி ஸ்ரீ அன்னமாசாரியரே ஆவார். நாதோபாஸனையிலும் விவரிக்கவொண்ணா அத்யாத்மிக நிலையிலும் அவர் மிக உயர்ந்த நிலையை எய்தித்தம்மை ஆட்கொண்ட தெய்வீக ஸௌந்தர்யத்தை இசைத் தறியிலே பல இணையற்ற பட்டுப் பீதாம்பரங்களாக செய்து உருவாக்கிக் கொண்டிருந்தார். படைப்புத்திறனின் ஒழுங்கும், அளவும், விளக்கவொண்ணா ஆனந்தமும் காலத்தை வென்ற அவரது ஸங்கீர்த்தனங்களின் லக்ஷணங்களாயின.

## பக்தியும், பரமார்ப்பணமும், கருவில் பொருட்செறிவும்

கர்நாடக இசையின் மாபெரும் விற்பன்னராக அகில தேசங்களும் போற்றும் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களால் சாச்வதமான இந்த இசைப் பொக்கிஷமான ஸ்ரீ அன்னமாச்சாரியரின் ஸங்கீர்த்தனங்களில் சில தக்கபடி மெட்டமைக்கப்பட்டு, நெஞ்சையள்ளும் ராகங்களில் பாடப்பட்டுள்ளது ரஸிகருலகின் மகத்தான பாக்கியமாகும். பக்தியுடன், இசைத் தொண்டுக்கே தம்மை அர்ப்பணித்திருக்கும் எம்.எஸ். அவர்களின் பாங்கும், தாம் கையாளும் பாவப் பொருளின் உயிரினுள்ளே புகுந்து அதில் கரையும் அவரது பான்மையும் ஒன்று சேர்ந்து இப்பாடல்களை அவர் கானம் செய்யும்போது நமது ஆன்மாவையே அவை உயர்த்தி விடுகின்றன. இதுகாறும் பட்டை தீற்றப்பெறாத நிலையிலிருந்த அன்னய்யாவின் பாடல்கள் இப்போது எம்.எஸ். அவர்களால், ஒரு கைதேர்ந்த பொற்கொல்லரால் வெட்டிக் கடைசல் பிடிக்கப்பட்ட வைரங்களாகி ஜ்வலிக்கின்றன. இசையை எம்.எஸ். தேர்ச்சியுடன் ஆள்கிறார் என்பதைவிட இசையே எம்.எஸ்ஸை ஆட்கொண்டுவிட்டது என்று சொல்வதுதான் பொருந்தும்.

## ஐந்து புண்ணிய நதிகள்

''ஸ்ரீ வேங்கடேச்வர (பாலாஜி) பஞ்சரத்னமாலா'' எனப்படும் இந்த ஐந்து எல்.பி. தொகுப்பை நாம் பாரதத்தின் ஐந்து புண்ணிய நதிகளுக்கு ஒப்பிட்டால் அன்னமாசார்யரின் கீர்த்தனங்கள் மட்டுமே கொண்ட முதல் இசைத்தட்டை கிருஷ்ணா நதி எனலாம். அன்னய்யா கிருதிகளில் ஆறும் ராஜாஜியின் ஒரு பாடலும் கொண்ட இரண்டாவது எல்.பியைக் காவிரி எனலாம். ஸம்ஸ்கிருதத்தில் 'நாமராமாயணம்' ஹிந்தியில் துளசிதாஸரின் 'ஹநுமான் சாலீஸா' முதலியவற்றைக்கொண்ட மூன்றாவது எல்.பியை யமுனை எனலாம். ஸ்ரீசங்கரர். ஸ்ரீராமனுஜர்.ஸ்ரீமத்வர். ஸ்ரீசைதன்யர்,ஸ்ரீகாஞ்சி பெரியவர்கள், ஸ்ரீச்ருங்ககிரி பூர்வாசார்யர்கள். ஆகிய ஆச்சாரியர்களது துதிகள் அடங்கிய நாலாவது இசைத்தட்டை கங்கை என்று சொல்லலாம். அன்னய்யாவின் பாட்டுக்கள் மட்டுமே கொண்டு அமைந்துள்ள இந்த ஐந்தாவது எல்.பி. இசைத்தட்டை ஆந்திர நாட்டுக்கு வளமான வாழ்வும் கலாசார மேன்மையும் அள்ளி வழங்கும் கோதாவரி நதிக்கு ஒப்பிடுவதே சாலப் பொருந்தும்.

## தம்மைத்தாமே விஞ்சுகிறார் எம்.எஸ்.!

இந்த இசைத்தட்டு முழுவதிலும் ஸ்ரீமதி எம்.எஸ். ஸங்கீதத்தில் தமக்குள்ள பூர்ணமான தேர்ச்சியைக் காட்டியிருக்கிறார். கற்பனைச் செழுமையையும், கலை நுட்பக்கட்டுப்பாட்டையும் மிகத் துல்லியமாகச் சம நிலையில் வெளிப்படுத்தியிருக்கிறார். பாவத்தில் ரசிகரைத் தோயச் செய்வதற்கு எவ்வளவு அவசியமோ அதற்கு மேற் படாமலும், குறைந்து போகாமலும் கற்பனைக் கலையை நுட்ப உணர்வால் கட்டுப்படுத்தும் திறன் மிக உயர்ந்த, தேர்ந்த கலைஞருக்கே உரித்தானது. எம்.எஸ்.ஸின் அத்திறனை இங்கு முழுமையாக காண்கிறோம், ஸங்கீத சாதனை என்று மாத்திரம் ஸ்வச்சமாகப் பார்ப்போமாயின் இவ்விசைத் தட்டின் மூலம் ஸ்ரீமதி எம்.எஸ். தம்மையே தாம் விஞ்சிவிட்டார் என்றுதான் சொல்லவேண்டும்.

## அமைதி அலைகளின் மேல் அன்னப்பறவையென...

இத்துடன் ஸ்ரீ வெங்கடேச்வர (பாலாஜி) பஞ்சரத்னமாலா என்கிற எல்.பி. இசைத்தட்டுத் தொடர் நிறைவுறுகிறது. இந்தப்பாமாலை முழுவதையும் எடுத்துக்கொண்டால் ஸங்கீத பாணியில் காணும் கௌரவ எழில், தூய்மை இவற்றாலும், பாடல்களின் வளமை, வண்ண வண்ணமான வகையாலும் வாக்கேயக்காரரின் நிலைக்குச் சமமாகவே ஸ்ரீமதி எம்.எஸ். உயர்ந்து விட்டார் என்றுகூடச் சொல்லலாம். அன்னய்யாவைப் போலவே அமைதியான ஆன்மீகப் பொய்கையில் அன்னப்பறவையென ஊர்ந்து நம்மையும் உடன் கொண்டு செல்கிறார் ஸ்ரீமதி எம்.எஸ். ஆம், இந்த ஐந்து இசைத் தட்டுகளிலிருக்கும் அவரது இசையில் சலனத்தைவிட சாந்தியையும், உணர்ச்சி மோதலைவிட உள்ளச்சம நிலையையும், உறுத்தும் யதார்த்தத்தை விட தன்னை மறந்த லயத்தையும் நுகர்கிறோம்.

Exempt from Sales Tax in the State of
Andhra Pradesh Vide G.O. MS No. 1159
REV (S) DEPT dated 17th Sep 1979.



TIRUMALA
TIRUPATI
DEVASTHANAMS





THE
GRAMOPHONE
COMPANY OF
INDIA LTD



APRC 157

# சம்பந்தி

விமலாரமணி

"எங்கேய்யா இன்னும் சேர்மனைக் காணோம்? சமபந்திக்காக எத்தனை ஜனம் காத்திட்டு இருக்கு! இன்னும் இந்த ஆளைக் காணோமே!"

"வந்துடறேன்னுதான் சொன்னாங்க... ஏன் இப்படி லேட் பண்றாருன்னு தெரியல்லே...."

"இன்னிக்குப் பூணூல் பண்டிகை. பூணூல் போட்டுட்டு லேட்டா வர்றாரோ. இல்லே வராமலே போறாரோ?"

"அதெப்படி அவருதான் தலைவர்... அவரே வராமல் போனால் எப்படி?"

"அவரு வருவார்ன்னு எனக்குத் தோணலீங்க."

"ஏன்?"

"அவருக்கு இந்த மாதிரி சமபந்தி போஜனம், எல்லா ஜனத்தோடயும் சரிசமமா சாப்பிடறது இதெல்லாம் பிடிக்குமோ, புடிக்காதோ?"

"ஆர்ரு இவன்? அரசாங்க உத்தரவு. இப்படிஞ்சுதான் நடக்கணும்."

"அண்ணாச்சி... லேட்டாயிட்டே வருது. இன்னும் நாலு கோயில்லே சமபந்தி போடணும். போட்டோகிராபர் கூடக் காத்துக்கிட்டு இருக்காரு. சட்டுப்புட்டுன்னு உட்கார்ந்தா சீக்கிரமா சாப்பிட்டேன்னு பேர் பண்ணிண்டு, போட்டோ எடுத்துட்டு அடுத்த பந்திக்குப் போயிறலாம்..."

அனைவரும் சாப்பிட உட்கார்ந்தனர்.

சுற்றி நின்ற ஏழை பாழைகள் கூட்டம் வடை, பாயசச் சாப்பாட்டுக்காக நாக்கைச் சப்புக்கொட்டிக் கொண்டு காத்திருந்தது.

அழகாக நுனி இலை போட்டு, வடை என்ன, பாயாஸம் என்ன, ரவா லட்டு என்ன, புளியோதரை என்ன... என்று போட்டு அமர்க்களப்படுத்தி விட்டார்கள் இந்தக் கோவிலில்.

நல்ல பூரஸ்பூகள்.

கமிட்டி அங்கத்தினர்கள் ஏதேதோ பேசிக் கொண்டு, வராத சேர்மனைத்திட்டிக்கொண்டு வடை பாயசத்தை ஒரு கை பார்த்தனர்.

"அப்படி சுத்த பத்தம், உயர்வு தாழ்வு பாக்கறவனை யெல்லாம் ஏன் சேர்மன் ஆக்கறீங்க?"

"அதில்லிங்க... அவரு காந்தி பக்தர். சுதந்திரப் போராட்ட காலத்திலே ஜெயிலுக்குப் போனவரு."

"ஜெயில்லே கூடத் தனியாத்தான் சமைச்சுச் சாப்பிட்டாரோ?"

பெரிய மனிதர் ஒருவர் ஜோக்குக்குக் கூட நின்ற... தப்பு உட்கார்ந்திருந்த கூட்டம் சிரித்து ரசித்தது.

"எல்லாம் சாப்பிடுங்க... நல்லாச் சாப்பிடுங்க... வயிறாரச் சாப்பிடுங்க..."

கூடத்தில் கோஷித்தாப் போட்டார் ஒருவர்.

அடுத்து—

இன்னொரு கோவில்.

இங்கும் ஏகத் தடபுடல். விருந்து உபசரிப்பு அமர்க்களம்... மனம் கொண்ட அளவுக்கு வயிற்றில்தான் இடமில்லை.

காமிராக்கள் பளிச்..

பற்கள் பளிச்...

தொப்பைகளின் பளிச்...

அடுத்து—

வரிசையாக எத்தனை சமபந்தி போஜனம்.. என்ன சாப்பாடு!

என்ன சமாசாரம்?

இந்த மாதிரி நாலு மனுஷங்களோட கலந்து சாப்பிட, பழகக் கொடுத்து வைக்கணும்... சேர்மன் வராமல் இருந்துட்டாரே!

கடைசி வரையில் சேர்மன் வரவே இல்லை!

இவர்கள்தான் மறுபடியும் மறுபடியும்...,

அன்று—

கமிட்டி மீட்டிங்.

சமபந்தி போஜனச் சாப்பாட்டுக்குப் பின்னே சொல்லி வைத்தாற் போல் பாதிப் பேருக்கு வயிற்று வலி.

சாப்பிடாவிட்டால் பசியில் வயிறு வலிக்கிறது. சாப்பிட்டாலும் அஜீர்ணத்தால் வயிறு வலிக்கிறது.

கமிட்டி மீட்டிங்குக்குப் பாதிப் பேர் வரவில்லை.

அன்று சேர்மன் வந்திருந்தார்.

"என்ன செட்டியார்... அன்னிக்குச் சமபந்திக்கு வராமப் போயிட்டீங்களே! எவ்வளவு சிறப்பா நடந்துச்சு தெரியுமா?"

செட்டியார் சிரித்துக் கொண்டார்.

"பார்த்தேன்.... எல்லாம் பேப்பர்லே பார்த்தேன். நான் வராட்டி என்ன, நீங்கள்ளாம் போயிக் கலந்துட்டு நல்லா நடத்திக் கொடுத்தீங்க இல்லே?"

"செட்டியார் வரலேன்னு எல்லாருக்கும் கொஞ்சம் வருத்தம்தான்."

"என் மகனுக்கு அடுத்த வாரம் கல்யாணம் நிச்சயம் பண்ணியிருக்கேன். அந்த பிஸியிலே வர முடியாமப் போயிடுச்சு..."

செட்டியார் சிரித்தபடி கூறினார்.

'பொய்... அத்தனையும் பொய்... சமபந்தி போஜனம் சாப்பிட இஷ்டப்படாம ஒட்டுக்



குள்ளார முடங்கிக்கிட்டுப் பொய்யா பேசறார் செட்டியார்?' — ஒவ்வொருவர் மனத்திலும் இதே எண்ணம்!

மாரிமுத்துவுக்குக் கோபம் வந்தது.

''சும்மா சொல்லாதீங்க செட்டியார்... நீங்க வராததுக்கு வேறே ஏதோ காரணம்னு பேசிக்கிட்டாங்களே....''

செட்டியார் சிரித்தபடி கல்யாண இன்விடேஷனை எடுத்து ஒவ்வொருவருக்காகத் தந்தபடி கேட்டார்.

''என்ன காரணம்னு பேசிக்கிட்டாங்க?''

''நீங்க ஒசந்த ஜாதியாம். என்னை மாதிரி ஹரிஜன் கூடச் சரிக்குச் சரியாச் சாப்பிட வரமாட்டீங்கன்னு சொல்லிக்கிட்டாங்க.''

ஒரு கணம் அத்தனை பேரையும் உற்றுப் பார்த்த செட்டியார்: ''அப்படியா பேசிக்கிட்டாங்க?... சரி... அடுத்த வாரம் கட்டாயம் எல்லாரும் கல்யாணத்துக்குத் தவறாம வந்துடுங்க.. அதுக்கு மறுநாளே இன்னொரு கமிட்டிக் கூட்டம் போடுங்க.. அன்னிக்கு நான் பேசறேன்...இன்னிக்குப் பாதிப் பேர், வரலே... இந்த மீட்டிங்கை போஸ்ட் போன் பண்ணி அன்னிக்கு வச்சுக்கலாம்.'' செட்டியார் கிளம்பிப் போயிட்டார்.

''சுத்த ஹம்பக். இமீன்னு கேட்டவுடனே திகைச்சுப் போயிட்டார். என்ன காரணம் சொல்றதுன்னு புரியல்லே... அடுத்த வாரம் போஸ்ட்போன் பண்ணிட்டார். அடுத்த வாரம் வராமலாப் போகப் போறது? இதே கேள்வியை நான் கேட்காமலா போகப்போறேன்?''

மாரிமுத்து இரைந்து பேசினான்.

ஆயிற்று... செட்டியார் வீட்டுக் கல்யாணம் சிறப்புற நடந்து முடிந்தது. ரிஸப்ஷனுக்கு ஊர் கொள்ளாமல் ஜனங்கள் வந்திருந்தனர். லைட் மியூஸிக் கச்சேரி... டிபன், விருந்து என்று ஏக அமர்க்களப்படுத்தி விட்டார் செட்டியார்.

மாரிமுத்து பார்த்துக் கொண்டே இருந்தான்.

தன் பிள்ளை கல்யாணத்தை இத்தனை ஆடம்பரமாகச் செய்யத் தெரிந்த செட்டியாருக்கு அன்று சமபந்தி போஜனத்துக்கு வரத் தெரியவில்லையோ? அப்பாடி... செட்டியார் எத்தனை போட்டோக்களுக்கு எப்படி எப்படி போஸ் கொடுத்தார்?

கலெக்டருடன் ஒரு போட்டோ, கமிஷனருடன் ஒரு போட்டோ! ஏழைகளின் எளிய சாப்பாடு மட்டும் அலட்சியம்தான்.

இவரெல்லாம் ஒரு தியாகி... ஜெயிலுக்குப் போய் வந்த உத்தமர்! சே!

மறுநாள்—

'டாண்' என்று பத்து மணி அடிக்க அத்தனை பேரும் செட்டியார் வீட்டு மாடியின்





பெரிய ஹாலில் 'கூடிவிட்டனர். வீடு இன்னும் முழுமையாகத் தன் திருமண அலங்காரத்தைக் கலைத்துக் கொள்ளவில்லை.

செட்டியார் அறைக்குள் நுழைந்தார்.

அனைவரும் எழுந்து நின்றனர்.

"எல்லாரும் வந்துட்டீங்களா? முக்கியமா மாரிமுத்து வந்துட்டாரா? என்ன கேட்டீங்க? நான் சமபந்தி போஜனம் சாப்பிடப் பிடிக்காம உசந்தவங்கிற அபிப்பிராயத்துலே, 'சுத்தமா' வீட்டுக்குள்ளார குந்திட்டு இருந்தேன்! அப்படித்தானே?"

மாரிமுத்து முணு முணுத்தான்.

"நான் மட்டும் சொல்லலே.. எல்லாருமே சொன்னாங்க!"

"பரவாயில்லே... நான் ஒரு காந்தி பக்தன்னு தெரியுமா?"

---

கல்லூரி பேராசிரியர்: இந்தக் காலத்து மாணவர்களுக்கு 'விழிப்புணர்ச்சி' இல்லாத காரணத்தால்தான் மாணவர் சமுதாயம் பின்தங்கிய நிலையில் உள்ளது.

மனைவி : எப்படி இதைக் கண்டு பிடிச்சீங்க?

பேராசிரியர் : நான் கல்லூரியில் 'கிளாஸ்' நடத்தும்போது கண்கூடாகப் பார்க்கிறேனே!

-எல். பாலு



---

"பக்தன்கிற பேருலே வேஷம் போடறவங்களும் இருக்காங்க, இல்லே?"

"என்ன மாரிமுத்து முணு முணுக்கிறீங்க? இரைஞ்சு பேசினாப் பதில் சொல்ல வசதியா இருக்கும்."

"......"

"சரி... நானே சொல்றேன்... நீங்க அன்னிக்கு ஒரு நாள்தான் சமபந்தி போஜனம் சாப்பிட்டீங்க... ஆனா நான் தினமே என் வீட்டிலே சமபந்தி போஜனம் சாப்பிடறேன் தெரியுமா? நீங்களெல்லாம் என்னிக்கோ ஒரு நாள் ஏழைகளுக்குத் தானம் பண்ணிட்டு போட்டோ புடிச்சு வச்சுக்கிறீங்க. ஆனா நான் ஒரு ஏழையையே வளர்க்கிறேன் தெரியுமா? ஆமாய்யா... என்னோட மகன்னு நீங்களெல்லாம் இத்தனை நாளா நெனைச்சுக்கிட்டு இருந்த என் பையன் என்னோட சொந்த மகன் இல்லே.... வளர்ப்புப் பையன். அதுவும் ஒரு ஹரிஜனப் பையன்... வாழ்வு தாரானா ஒரு ஹரிஜனுக்கு வாழ்வு கொடுன்னார் காந்திஜி. அவரோட வாக்கைத் தேவ வாக்காக் கடைப்பிடிச்சு, குழந்தை இல்லாத நானும், என் சம்சாரமும் ஒரு ஹரிஜனப் பையனைத் தத்து எடுத்துட்டோம். அதனாலே எங்க குடும்பத்திலே இருந்து நாங்க விலக்கி வைக்கப்பட்டோம். எங்க கிராமத்துலே இருந்து நாங்க வெளியேற்றப்பட்டோம். எங்களோட சேர்ந்து அந்த ஹரிஜனப் பையனும் அவமானப்படுத்தப்பட்டான். அன்னிக்கே நான் ஒரு தீர்மானத்துக்கு வந்தேன். புரட்சி பண்ணறதுக்கு விளம்பரம் தேவை இல்லே. இது திடீர்னு ஒரு நாள் பூகம்பமா வெடிக்கட்டும்னு தீர்மானிச்சுட்டேன். அதனாலே என்னோட சொந்த ஊரை விட்டு இந்த ஊருக்கு வந்து பொழைச்சேன், உழைச்சேன்... உயர்ந்தேன். என் பையன் யார்ங்கிறதை நான் யாருக்குமே சொல்லல்லே. ஏன் சொல்லணும்? என்னோட தியாகத்துக்குப் பாராட்டை எதிர்பார்க்கிற பந்தயக்காரனா நான் வாழ விரும்பல்லே. ஆனா என்னைப் பதம் பார்க்கற ஊசி முனைகளை ஒரு நாள் ஒடிக்கணும்னு நான் நினைச்சிருந்தேன்.

"என் பையன் ஏழை ஹரிஜனப் பையன்... இவனை நான் முறைப்படி தத்து எடுத்துட்டேன். இவனை வளர்த்து என் கூட ஒண்ணா சாப்பிட வச்சு, ஒரே படுக்கையில் படுக்க வைச்சு, படிக்க வைச்சு – பிலானி வரை படிக்க அனுப்பி இவனை இன்னிக்கு ஒரு உயர்ந்த இன்ஜினியரா ஆக்கியிருக்கேன்... இந்தப் பெருமை அத்தனையிலேயும் என் சம்சாரத்துக்கும் பங்கு உண்டு. என் புள்ளைக்கும் எல்லா உண்மைகளையும் சொல்லியிருக்கேன். யாருக்காவது ஏதாவது சந்தேகம் இருந்தா மேஜை மேலே இருக்கிற இந்தப் 'பைலை'ப் பார்த்துச் சந்தேகத்தைத் தீர்த்துக்கலாம். என் மகனை நான் முறைப்படி தத்து எடுத்துட்டது. அதன் பழைய சரித்திரம் எல்லாம் இதுலே ஆதாரத்தோட இருக்கு... இதையெல்லாம் சொல்லணும்னு நான் நினைக்கல்லே. ஆனா சொல்ல வைச்சுட்டீங்க... நிஜமாலுமே அன்னிக்கு நான் வராத காரணம் என் பையனோட கல்யாணக் காரியம் ரொம்ப இருந்ததுதான். என்ன மாரிமுத்து ஸார்! இன்னும் ஏதாவது சந்தேகம் இருக்கா?"

அனைவரும் செட்டியாரைப் பிரமிப்புடன் பார்த்தார்கள்.

அவர் தலைக்கு மேலே காந்தி மகான் கண்ணாடி பிரேமில் கதர் மாலையுடன் புன்சிரிப்பு மாறாமல் சிரித்துக் கொண்டிருந்தார்.

"எவன் ஒருவன் மற்றவர்களின் துன்பத்தை உணருகிறானோ அவனே, உண்மையான வைஷ்ணவன்....." – என்ற வாசகங்கள் கண்களுக்குத் தெரிகின்றன.

# நவ நவராத்திரி!



- என்னப்பா, செட்டியார் பொம்மை இப்படி இளைச்சிருக்கு?
- இப்ப இருக்கிற விலைவாசியிலே இப்படித்தான் இருக்கும்!

- கொலுவிலே கொஞ்சம்பாடு, உஷா!
- இப்படிச் சொன்னா சும்மா பாடுவாளா?... அவங்க வீட்டுக்கு நாம 'பெண் பார்க்கப் போனா சொஜ்ஜி, பஜ்ஜி கொடுத்து உபசாரம் பண்ணிப் பாடுவா, அம்மா!





- எங்கே ஒரு போர்வையும் காணோம்?
- எல்லாம் கொலுப்படியிலே இருக்கு!

- சாஸ்திரிகளைப் பக்கத்தில் வைச்சுண்டு ஒடைஞ்ச பொம்மையை ஒட்டுங்கோ! இப்படி ராமர் உடலில் ராவணன் தலையை ஒட்ட வைப்பாங்களோ?





- இந்த மாசம் மாடிப்போர்ஷன் வாடகை பணத்திலே கொலுப்படி வாங்கிடுங்க!
- ஒண்ணுக்கு ரெண்டாவே வாங்கிடுங்க... மாடிப்படி இல்லாம இப்படி எத்தனை நாள் அவஸ்தைப் படறது!



அப்பவே சொன்னேன், கேட்டா தானே? பொம்மைகளை மேலேயிருந்து வெக்கணும்னு!..




● போதும்டிம்மா! நிறுத்து!.. எல்லாப் பொம்மையும் உருகிக்களிமண்ணா வழியுது!



● கூடை நிறைய பொம்மைகளை வாங்கிட்டு இப்படி என்னைத் தூக்கிட்டு வரச் சொன்னா?.. பொம்மை விக்கறவன்னு நினைச்சுக்கப் போறாங்க!



● எங்கேடி, கொழந்தையைக் காணோம்?



● தினமும்தான் கொலுவிலே ஒவ்வொருத்தர்பாடறேன்னுட்டு சாதகம் பண்றாங்களே?.. நீங்க வேற சாதகம் பண்ணணுமா? நவராத்திரி ஒன்பது நாள் சாதகத்தை நிறுத்தி வையுங்கோ!



## 14

ஹரிக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"என்ன ஆச்சு சாந்தி?" என்றான் பதற்றத்துடன்.

சாந்தியின் முகத்தில் அசாதாரணமான சோகம் தெரிந்தது. வெகு நேரம் அழுத மாதிரி கண்கள் வீங்கிச் சிவந்து தெரிந்தன.

சாந்தி வழக்கம்போல் சிரித்தாள்.

"ஒன்னும் ஆகலியே?" என்றாள்.

ஆனால் முகத்தில் ஒளியில்லை. சிரிப்பில் ஜீவனில்லை.

"உங்க முகத்துக்கு என்ன ஆச்சுன்னு கேக்கறேன். கன்னமும் கண்ணும் ஒரேயடியா வீங்கியிருக்கு. யாரோ மாறி மாறி அறைஞ்ச மாதிரி இருக்கு. யாரு அத்தனை தைரியசாலியா இருக்க முடியும்னு கேக்கறேன்!"

அவள் லேசாகச் சிரித்தாள்.

"யாரும் என்னை அறையலே. நேத்து ரொம்பத் தலைவலி. அதுக்காக ஒரு மாத்திரையைப் போட்டுண்டேன். அது ஒத்துக்கல்லே. அலர்ஜி ஆகி...."

அவன் அவளைக் கூர்மையாகப் பார்த்தான்.

"இதே உங்க தொழிலாப் போச்சு" என்றான்.

"எது?"

"பொய் சொல்றது."

அவள் தலையைக் குனிந்து கொண்டு தன் வேலையில் கவனமாக இருக்கிற மாதிரி பாவனை செய்தாள்.

"நிஜத்தை உங்களுக்குச் சொல்ல இஷ்டமில்லேன்னா நான் வற்புறுத்தல்லே."

"சொல்ல எதுவுமே இல்லே."

அவள் சொன்னது காதில் விழாத மாதிரி அவன் தொடர்ந்தான்.

"நீங்க யார் கிட்டேயும் எதையும் சொல்லுவீங்கன்னு தோணல்லே."

"ஏன்?"

"சில பேருக்குப் பாரத்தைச் சுமந்துதான் பழக்கம். இறக்கிப் பழக்கமில்லே."

# அந்த நேரத்து நியாயங்கள்

— மாலதி —

அவள் திடுக்கிட்டாற்போல் அவனைப் பார்த்தாள். பிறகு சிரித்தாள்.

''என்னைப் பத்தி நிறைய ஆராய்ச்சி பண்ணி வெச்சிருக்கிங்க போலிருக்கே?''

''வேறே என்ன பண்ண முடியும்? அழகான பெண்களைப் பத்தி ஆராய்ச்சி ஒண்ணுதானே பண்ண முடியும் இப்ப?''

அவள் தன்னை மறந்துசிரித்தாள்.

''அநியாயமா பொழுதையெல்லாம் வீணாக்காதீங்க. ஆராய்ச்சி பண்ணனைத் தனையோ விஷயம் இருக்கு.''

''பொழுதை வீணாக்கக் கூடாதுன்னு நான் ரொம்ப தீவிரமா நினைச்சிண்டிருந்தேன் சாந்தி. மனுஷனைப் போல் ஒரு சுவாரஸ்யமான சப்ஜெக்ட் வேறே ஒண்ணுமில்லேன்னு இங்கே படுத்துண்டதிலேந்து தோணறது. என்னாலே முடிஞ்ச உதவி அதாவது வாயாலே, என் கூடப் பழகறவங்களுக்குச் செஞ்சா என்னன்னு நினைச்சுக்கிறேன். நீங்கள் என்னுடைய முதல் கேஸா இருக்கக் கூடாதா?''

அவள் முகத்தில் புன்னகை அரும்பிற்று. மெல்ல மெல்லப் பழைய ஒளி படர்வது போலிருந்தது.

''என்னை ஒரு கேஸ்னு தீர்மானிச்சுட்டீங்களா?''

''மகா மோசமான கேஸ்னு நினைக்கிறேன். ராத்திரியெல்லாம் தூக்கம் வராம அலையற கேஸ் — கவனிக்கல்லேன்னா மெண்டல் ரெக்காப் போகக் கூடிய கேஸ்.''

அவள் மௌனமாக அவன் உடலைத் துடைத்தாள். பௌடர் போட்டுச் சட்டையை மாட்டி விட்டாள்.

அவளுடைய செய்கையைப் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்து விட்டுத் தன்னையறியாமல் அவன் மெல்லக் கேட்டான்.

''சாந்தி, நீங்க உங்க புருஷன் கிட்டச் சந்தோஷமா இருக்கீங்களா?'' கேட்ட விநாடியில் அவளிடம் இந்த மாதிரி ஓர் அந்தரங்கமான கேள்வியை நாம் எப்படிக் கேட்கத் துணிந்தோம் என்று திகைப்புடன் கூச்சமேற்பட்டது.

சட்டென்று நிமிர்ந்த அவளைப் பார்த்து அவன் தயக்கத்துடன் சிரித்தபடி, ''ஸாரி வாய் தவறிக் கேட்டுட்டேன். ஆனால் உங்க முகம் இன்னிக்கு இப்படி இருக்கிறதுக்குக் காரணம் நிச்சயம் அலர்ஜி இல்லேன்னு எனக்குத் தெரியும்'' என்றான்.

அவள் நிதானமாக அவனுக்குக் கொடுக்க வேண்டிய மருந்தை நீட்டினாள். இப்பொழுது தெளிவாக அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது. அவன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் மருந்தைச் சாப்பிட்டுவிட்டுப் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டான்.

அவனிடம் எதுவுமே பேசாமல் அவள் மற்றப் படுக்கைகளுக்கு நகர்ந்தாள்.

இவன் யார் நம்மைக் கேட்பதற்கு என்று அவளுக்குக் கோபம் வந்திருக்க வேண்டும். சே, எத்தனை பெரிய முட்டாள்தனம் பண்ணி விட்டோம்? அவள் ஒருத்திதான் நம்மிடம் பிரியத்தைக் காண்பிக்கிறாள். இதமாகப் பேசுகிறாள். அவளும் இப்போது உதட்டுப் பேச்சோடு நிற்கப் போகிறாள்.

ஆனால் இன்று அவளைப் பார்த்ததும் தூக்கி வாரித்தான் போட்டது. அவள் நிச்சயமாக அழுதிருக்க வேண்டும் என்று தோன்றிற்று. இங்கிருக்கும் ஒவ்வொரு நோயாளியின் துக்கத்தையும் மனப்பூர்வமான கரிசனத்துடன் குறைக்கப் பார்க்கும் இவளும் ஒரு துக்கத்தைச் சுமக்கிறாள் என்றால் அதை யார் குறைப்பார்கள்? எத்தனையோ விதத்தில் நமக்கு இதமாக இருக்கும் இவளுக்கு நாம் வார்த்தைகளாலாவது இதத்தை அளிக்க வேண்டாமா? அதற்கெல்லாம் இவள் சந்தர்ப்பம் அளிக்கமாட்டாள்என்று தோன்றியது.

'நான் சிரிப்பதும் இதமாக நடந்து கொள்வதும் என் தொழிலுக்கு அத்தியாவசியமான கருவிகள்' என்று உணர்த்துகிற மாதிரி நடந்து கொள்கிறாள்.

அதற்கு மேல் ஏதும் இருக்காதா? இல்லையென்றால் கிளம்பும்போது அந்த சர்மாவின் கண்களில் நீர் ஏன் துளிக்கிறது? கண்ணை மூடிக்கொண்டு எப்பவும் அரைத் தூக்கத்தில் இருக்கும் ராம்சிங்கின் அம்மா, சாதாரணமாக எவருடனும் சுமுகமாகப் பேசாதவள், சாந்தியைப் பார்த்ததும் எப்படி முகம் மலர்ந்து போகிறாள்? மிக்கிக்குக்கூட சாந்தி இருந்தால் சொந்த அம்மா கூட வேண்டியதில்லை. சாந்தியைப் பார்க்கும்போது சட்டென்று மனசில் எல்லோருக்கும் சந்தோஷம். இந்த மாதிரி இருக்கும் ஒருத்திக்கு என்ன மாதிரி துக்கம் இருக்கும்?

திடீரென்று அவனுடைய கவனம் கலைந்தது. கௌதமின் மனைவி ஏதோ பதற்றத்துடன் காணப்பட்டாள். ஒரு அவசரத்துடன் தூரத்தில் இருக்கும் சாந்தியிடம் சென்று ஏதோ சொன்னாள்.

கௌதம் மூச்சு விடச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தான். முகம் இறுகிக்கொண்டு சிவந்து போயிருந்தது. ஹரிக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்ன ஆகிவிட்டது

இவனுக்கு? நேற்றிரவு கூட சிரிக்கச் சிரிக்க மனைவியிடம் பேசிக் கொண்டிருந்தானே?

சாந்தி துரிதமாக வந்து பரிசோதித்துப் பார்த்தாள். மறு நிமிஷம் உள்ளேயிருந்து ஆக்ஸிஜன் சிலிண்டரைக் கொண்டு வந்து வைத்தாள். சில நிமிஷங்களில் பெரிய டாக்டர் வந்தார். வெகு தீவிரமான முக பாவத்துடன் பரிசோதித்து விட்டு முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டார். அவரையே ஒரு எதிர்பார்ப்புடன் பீதி நிறைந்த விழிகளுடன் பார்த்துக்கொண்டிருந்த கௌத்தம்மின் மனைவியைப் பார்க்கக் கண்ணுவியாக இருந்தது.

''நீங்க உசிரோடு இருக்கிறது ஒன்னே எனக்குப் போதும்...''

அந்த உசிருக்கு இப்போது ஏதேனும் ஆபத்தா? வெறும் கையும் காலும்தான் அசையவில்லை என்றால் உசிருக்குக் கூட ஆபத்தாக இருக்குமோ?

அந்த வார்டிலிருந்த அத்தனை நோயாளிகளும் தங்களுடைய நெருங்கிய பந்துவுக்கு ஏதோ ஆகிவிட்ட மாதிரி பதைத்துக் கண்களில் பீதியை ஏந்திக் கொண்டு உறைந்து போனதை அவனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. நர்ஸ்களும் டாக்டர்களும் கௌதம்மின் கட்டிலுக்கருகில் அடிக்கடி வந்து சுற்றி நின்றார்கள். நர்ஸ்கள் அவன் மார்பை மெதுவாகத் தேய்த்தார்கள்.

ஹரிக்கு இருப்புக் கொள்ளவில்லை. கௌத்தம்மிற்கு என்ன ஆகுமோ என்கிற பயத்துடன் அவனுடைய மனைவியை நினைத்து அதிக பரிதாபம் ஏற்பட்டது. கௌதம்மிற்கு ஏதேனும் ஆகிவிட்டால் அவள் எப்படித் தாங்கப் போகிறாள்?

மதிய உணவுக்குப் பிறகு மறுபடியும் வந்த சாந்தியிடம் அவன் அவசரமாகக் கேட்டான்: ''என்ன ஆச்சு சாந்தி கௌதம்முக்கு?''

''மார்பிலே சிக்கல் ஏற்பட்டுப் போச்சு. இந்த மாதிரி கேஸிலே அது ஏற்படறதுதான். கழுத்துக்கடியிலே இருக்கிற உறுப்புக்களெல்லாம் தானு இயங்க முடியாததாலே நுரையீரல்லே ஸெக்ரீஷன் சேகரிச்சுப் போச்சுன்னு பேஷண்ட் அதைத் தானே வெளியே கொண்டு வர முடியாது. அதனால கோளாறுகள் ஏற்படும்....''

''உசிருக்கு ஆபத்தில்லையே சாந்தி?''

அவள் அவனது நேரடிப் பார்வையைத் தவிர்த்தாள்.

''சொல்ல முடியாது ஹரி. பேஷண்டுக்கும் பிழைக்கணும்கிற ஆசை இருக்கணும்.''

அவனுள் லேசாக ஓர் அதிர்வு ஏற்பட்டது. கௌத்தம்மிற்கு ஆசை இருக்குமா? இத்தனை நல்ல மனைவி இருந்தும்? அந்தக் காதலே ஆசைக்குத் தடையாயிருக்கும் என்று தோன்றிற்று.

கௌத்தம்மின் மனைவி நீர்கூட அருந்தாமல் அவன் பக்கத்தில் கண்களைக் கொட்டாமல் உட்கார்ந்திருந்தது ஆச்சரியமாக இருந்தது. அவனுக்கு ஏற்படப் போகும் முடிவைப் பற்றிப் பரிபூர்ண பிரக்ஞையுடன் இருக்கிறாள் என்று தோன்றிற்று. ஒரு பொட்டுக் கண்ணீர் கூட விடாமல் தபஸ்வினி மாதிரி....

இந்த மாதிரிப் பெண்கள் கூட இப்பொழுது இருக்கிறார்களா?

அந்த வார்டு மொத்தமாக அன்று எதற்கும் முனறு முனுக்கவில்லை. எந்த வித வலியின் பிரக்ஞையும் இல்லாத மாதிரி ஒரு புரிந்து கொண்ட மௌனத்தில் இருந்தது. ஓர் அனுதாபப் பார்வை பார்த்துக் கொண்டு நின்றது. மிக்கிகூட இன்று வாயை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அங்கிருந்த பொதுவான மன நிலையை உணர்ந்த மாதிரி. பார்வையாளர்கள் நேரத்துக்கு முன் கௌத்தம்மை வேறு தனி அறைக்கு மாற்றிவிடப் போவதாக நர்ஸ்கள் பேசிக் கொண்டார்கள். அதற்கான ஆயத்தங்கள் நடந்து கொண்டிருந்தன.

திடீரென்று ஏதோ ஒரு ஓசை கேட்டது.

சடசடவென்று கட்டை முறிகிற மாதிரி. ஹரி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். கௌத்தம்மின் மார்பு மேலும் கீழுமாக இறைத்துக் கொண்டிருந்தது. நர்ஸ்கள் பக்கத்திலேயே இருந்தார்கள். எந்த விபரீதத்துக்கும் தயாராக நிற்கிறாற்போல. கௌத்தம்மின் கண்கள் மூடியே இருந்தன. எந்த விதமான முனகல்கூட இல்லை. மார்பு மட்டும் பயங்கரமாக மேலும் கீழும்... அத்தனை கட்டில்களும் பீதியுடன் பார்த்துக் கொண்டிருக்க, சட்டென்று மார்பு கீழ் நோக்கிப் படிந்தது. வலியினால் இறுகிப் போயிருந்த முகத்தின் தசைகள் மெல்ல மெல்லத் தளர்ந்து போயின. சில விநாடிகள் விக்கித்துப் போன மௌனம் நிலவிற்று. அந்த மௌனத்தைக் கிழித்துக் கொண்டு அவளுடைய விசும்பல் கேட்டது. இத்தனை நேரம், இத்தனை நாட்கள் பொறுமையாக இருந்ததற்குப் பரிகாரமாக — இனியும் என்னால் தாங்க முடியாது, உணர்ச்சிகளை அடக்க முடியாது என்கிற அழுகையாய் நர்ஸ்களும் பேஷண்டுகளின் அம்மாக்களும்



அணைத்துக் கூறும் ஆறுதல் மொழிகள் தனக்கு நேர்ந்த துக்கத்துக்கும் அநீதிக்கும் ஈடு கொடுக்க முடியாது என்று தெரிவிக்கும் அழுகையாய்—

ஹரி கண்களை மூடிக் கொண்டான்.

''பிழைக்கணும்கிற எண்ணம் பேஷன்டுக்கு இருக்கணும்.''

கௌத்தம்முக்கு நிச்சயம் இருந்திருக்காது. இந்த மனைவிக்கு ஆயுசுக்கும் பாரமாக இருக்க நிச்சயம் மனம் இடம் கொடுத்திருக்காது. ஏற்கனவே நிறைய பாரத்தைச் சுமக்கப் போகிறவள். அவனிருந்தால் அவனுடைய குடும்பத்தின் பொறுப்பைச் சுமக்க வேண்டியவள். அவனில்லாவிட்டால் ஹிமாசலப் பிரதேசத்தின் ஒரு கிராமத்தில் பெற்றோர்கள் வீட்டில் தனது நினைவுகளின் சுமையுடன் மாத்திரம் இருக்கலாம். இப்படித்தான் அவன் நினைத்திருக்க வேண்டும்.

ஆனால் ஆசைப்பட்டவுடன் உயிர் பிரிவது சாத்தியமா? யாருக்காகவும் உயிர் வாழ வேண்டிய அவசியமே இல்லாத என் உயிர் மட்டும் ஏன் இருக்கிறது இன்னும்?

அவன் தனக்குள் விரக்தியுடன் சிரித்துக் கொண்டான்.

உயிர் பிரிவதும் ஜனிப்பதும் நம் எண்ணங்களுக்கு இசைவாக இயல்பாக நடந்து விட்டால் பிறகு மனித சக்திக்கு வரம்புகளே இல்லை.

அவனுக்குக் கண்களைத் திறக்கவே கஷ்டமாக இருந்தது. ஒரு மணி நேர ஸ்தம்பித்த துக்கத்துக்குப் பிறகு கௌத்தம்மின் கட்டில் துரிதமாகக் காலியாயிற்று. படுக்கை மாற்றப்பட்டு (அதே படுக்கையா யிருந்தா பேஷன்டுகள் பயப்படுவாங்க) பெட்ஷீட் மாற்றப்பட்டு....

கௌத்தம்மின் மனைவியின் முகம் வெகு நேரத்துக்கு மனத்தில் நின்று சங்கடப்படுத்திற்று. நர்ஸ்களும் ஆயாக்களும் முடிச்சு முடிச்சாக நின்று மெல்லிய குரலில் துக்கம் காத்தது மனசை நெகிழ்வித்தது. எப்படி ஒரு குடும்பமாக இருக்கிறார்கள் இங்கு? தினம் தினம் மரணத்தையும் ஜனனத்தையும் பார்க்கும் டாக்டர்களும் நர்ஸ்களும் மெல்லிய உணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்டவர்கள் என்று இதுநாள் வரை மனத்தில் இருந்த எண்ணத்துக்கு மாறான ஆச்சரியமான அனுபவம். கூடவே தனது பாமரத்தனமான அறியாமையை நினைத்து வெட்கமேற்பட்டது. இவர்களது தொழிலின் அஸ்திவாரமே மனிதாபிமான உணர்வாக இருக்கையில் மனசு துல்லியமாக இல்லாமல் எப்படி இருக்கும்? டாக்டர் வர்மாவின் முகத்தில் தெரிந்த சோகம் இன்னும் மனக் கண்ணில் நின்றது. ஓர் உயிர் போய்விட்ட துக்கம் மாத்திரமில்லை அது. நான் தோற்றுப் போனேன் என்கிற துக்கம். மற்ற நோயாளிகளின் நம்பிக்கை ஆட்டம் கண்டுவிடுமே என்கிற துக்கம்.

கலகலப்பே இல்லாத ஒரு மௌனத்தில் சரசரவென்று இருள் படர்ந்தது. இன்று ஒரு நோயாளியும்— தூங்கப் போவதில்லை என்று அவன் நினைத்துக் கொண்டான். மறுபடியும் மறுபடியும் யோசித்துப் பார்க்கையில் கௌத்தம் இறந்தது நல்லதுதான் என்கிற எண்ணம் ஊர்ஜிதமாயிற்று. என்ன தான் பிரியம் இருந்தாலும் எத்தனை நாட்களுக்கு மனைவி, இருபத்தைந்து வயதைத் தாண்டாத ஒருத்தி, சலிப்பில்லாமல் கழுத்தளவில் மட்டும் உயிரை வைத்துக்கொண்டிருக்கும் கணவனைப் பார்த்துக்கொள்வாள்?

இரவு சத்தமாகத் தூக்கம் வரவில்லை. இன்றைக்கு ஒரு காம்போஸ் மாத்திரை கேட்டுப் போட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று அவன் நினைத்துக் கொண்டான். சாளரத்தின் வழியே பளீரென்று நிலா வெளிச்சம் இமைகள் மேல் நின்றது. ஒருக்களித்துப் படுத்துக்கொள்ள முடியாத நிலையில் அவன் கையைக் குறுக்காகக் கண்கள் மேல் போட்டுக்கொண்டான்.

தண்ணென்ற ஒரு கரம் அவன் கையை விலக்கிற்று.

சாந்தி — ஒரு சாத்விகமான புன்னகையுடன்.

''எப்படி இருக்கீங்க ஹரி?''

''ஸ்மசான வைராக்கியத்திலிருக்கேன்!''

''இன்னிக்கு நானும் ஒரு வைராக்கியத்திலே இருக்கேன். இத்தனை நாளா ஏதேதோ பிரமைகளை மனசிலே வெச்சிண்டு கலங்கிண்டிருந்தேன். இந்த உசிரு போக்குறது அடங்கக் கூடிய உசிருன்னு முதல் முறையா மண்டையிலே உறைச்ச மாதிரி இருக்கு இன்னிக்கு. அந்த உசிரை நான் கேவலமா நினைக்க விரும்பக் கூடாதுன்னு முடிவுக்கு வந்திருக்கேன்.''

நிலா வெளிச்சத்தின் பின்னணியில் அவளுடைய முகம் அசாதாரணமாக ஒளிர்ந்தது.

''எனக்குப் புரியல்லே.''

''சொல்றேன்'' என்றாள் அவள் மெல்லிய குரலில். ''இதுவரை யார் கிட்டேயும் ஏற்படாத ஒரு நெருக்கம் உங்க கிட்ட எனக்கு ஏற்பட்டிருக்கிறது ஆச்சரியமான விஷயம் ஹரி.'' (தொடரும்)



தந்தை: ''என்னம்மா தனம், ஏன் அழுகிறாய்?''

தனம்: ''அவர் செய்யற தப்புக் கெல்லாம், அவர் தலையில் அடித்துக்கொண்டே 'எல்லாம் என் மடத் தனம், எல்லாம் என் முட்டாள் தனம்' என்று என்னைத் திட்டுறார் அப்பா!''

- எஸ். பானு

# ஆண்மை

பிரதீபா ராஜகோபாலன்

சாயந்திரம் நாலு மணிக்குப் பஞ்சாலை முன்னால் இருந்த டீக்கடையில் ரத்தம் லேசாகக் கொதிக்க ருத்ரமூர்த்தி வந்து உட்கார்ந்தான்.

பாய்லரில் இருந்து வெளிவந்த ஆவியின் கொதி நிலையைப் போல அவன் மனநிலை இருந்தது. அடிக்கடி இடுப்பைத் தடவிக் கொண்டான்.

உள்ளே பத்துப் பன்னிரண்டு பேர் வடையும் போண்டாவும் தின்று கொண்டிருந்தனர். அதில் இரண்டு மூன்று பேர் 'தண்ணீரில்' மூழ்கியிருந்தார்கள்.

''என்னய்யா, மௌளகாய் போடவே மாட்டியா?'' என்று கடைக்காரனைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். ஒரு பையன் கடைக்காரன் காட்டிய ஜாடையினால் கைப்பிடி நிறைய வறமிளகாயைக் கொண்டுவந்து குடிகாரர்களுக்கு விநியோகித்தான்.

''இப்பச் சாப்பிடுங்கண்ணே... நாளை லேர்ந்து மௌளகாயை அரைச்சு ஊத்தச் சொல்றேன்...''

''உங்களுக்கு என்ன வேணும்?'' என்று ருத்ரமூர்த்தியைக் கடைக்காரன் கேட்டான்.

''ரெண்டு பஜ்ஜி சாயா... ஆமா மில்லு நாலரை மணிக்கு உட்டுடுவாங்களா?''

''இல்லீங்க... சரியா அஞ்சாகும்.''

அவன் இடுப்பைத் தடவிப் பார்த்துக் கொண்டான்.

பஜ்ஜி வந்தது.

''சாம்பார் ஊத்தட்டுங்களா?''

''ம்...''

''அண்ணனை எங்கியோ பார்த்த மாதிரி இருக்குதுங்களே? ரத்னபுரிங்களா?''

''இல்லேல்ல... டவுனுக்குள்ளே. எம் பொண்டாட்டியைப் பார்க்கணும்.''

கடைக்காரன் இதை எதிர்பார்க்கவில்லை.

''நான் எட்டாவது வரைதான் படிச்சிருக்கேன். அவ பத்தாவது. உள்ள டைம் ஆபீஸ்ல வேலை செய்யறா. நான் கிருஷ்ணா இஞ்சினீயரிங்ல வெல்டரா இருக்கேன். ரெண்டு பேருக்குள்ள ஒத்துக்கிறதில்ல. சொந்தத்தில இன்னொரு பொண்ணை நமக்குத் தோதாப் பண்ணிக்கலாம்னு இருக்கேன். இவளைக் கையெழுத்துப் போடுன்னு பத்து நாளாக் கேக்கறேன். முடியாதுங்கறா. அது தான் இன்னிக்கு இங்கேயே வந்துட்டேன். சைக்கிள் செயின்லே இடுப்புக்குக் கீழே நாலு வீசு வீசலாம்னு முடிவு பண்ணிட்டேன். இங்கே வ...''

டீ வந்தது.



ருத்ரமூர்த்திக்கு டீ உள்ளே போனதும் நரம்புகளில் துடிப்பு அதிகரித்தது. ''படிச்சவன்னு திமிர் ஜாஸ்தி. ரெண்டு விழுந்தா சரியாயிடும். அவ அக்கா உள்ளே 'விரியா'க் கூடை சொமக்கறா. இன்னைக்கு ரெண்டுல ஒண்ணு பார்த்திடறேன்'' என்றவன் தன் இடுப்புப் பெல்டிலிருந்து பத்து ரூபாய் நோட்டொன்றை மேசையின் மேல் வீசினான்.

''மணி ஆச்சா?''

''ஆச்சுங்க... பெல் அடிச்சிட்டாங்க'' என்றான் கடைக்காரன்.

சில்லறையை வாங்கி அலட்சியமாகப் பெல்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு, 'மெயின் கேட்'டுக்குச் சற்றுத் தள்ளி நின்று கொண்டான்.

ருத்ரமூர்த்தி மனைவியின் வருகைக்குத் தயார் செய்து கொண்டான். சுமார் அறுபது எழுபது பேர் வெளியேறிய பின் நீலப் பூ பிரிண்ட் செய்த வெள்ளைப் புடவையில் மூன்றடுக்கு டிபன் பாக்சுடன் இன்னொரு



பெண்ணுடன் சிரித்துக் கொண்டு அவன் மனைவி புஷ்பா வெளியேறினாள்.

..ருத்ரமூர்த்தி இடுப்பைத் தடவிக் கொண்டு மனசையும் உணர்ச்சியையும் தயாராக்கிக் கொண்டான். சுமார் இருபது அடி தாண்டிய பின் மனைவியைக் கரகரத்த குரலில் அழுத்தமாகக் கட்டி வைப்பது போல் ஆணையிடும் தோரணையில் கூப்பிட்டான்.

''புஷ்பா, நில்லு!''

மந்திரத்துக்குக் கட்டுண்டவள் போல் திரும்பிப் பார்த்தாள் புஷ்பா.

''என்னங்க இங்கே?வேலைக்குப்போகலே?''

''ரெண்டுல ஒண்ணு தெரியாமப் போற தில்லை'' என்றான் ருத்ரமூர்த்தி, குரலில் குரூரத்தை நிரப்பிக் கொண்டு.

ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று புஷ்பா உணர்ந்து கொண்டாள்.

''எதிருந்தாலும் வீட்டுக்குப் போய்ப் பேசிக்கலாங்க... எல்லாரும் பாக்கறாங்க பாருங்க...'' என்று அவன் கையை இதமாய்ப் பிடித்து இழுத்தாள்.

''எவன் பார்த்தா எனக் கென்னடி?.... என்னை உட்டுட றேன்னு இந்த செகண்ட்ல கையெழுத்துப் போடணும். இல்லேன்னு உன்னை உண்டு இல்லைன்னு பண்ணிடற துன்னு முடிவு பண்ணி இருக்கேன்...''

அதற்குள் சிறு கூட்டம் அவர் களைச் சுற்றிக் கொண்டது.

புஷ்பாவுக்கு அப்படியே அந்த விநாடியில் உயிர் போய்விடக்கூடாதா என்று ஆகிவிட்டது. உடம்பும் மனசும் கூனிக்குறுகிவிட்டது.

''போடறேனுங்க... ஆனா இங்க வேண்டாங்க... எல்லோரும் ஒரு மாதிரியாப் பாக்க றாங்க... நாளைக்கு எப்படி அவங்க முகத் தில முழிக்கிறது? அதும், எங்க அக்கா வீட்டுக்காரரை ஒரு வார்த்தை கேட்டுட்டு, நிதானமாப் பேசி முடிக்கலாங்க. இப்ப தயவு செஞ்சு வீட்டுக்கு வாங்க... கால்ல விழுந்து கும்பிடறேன்'' என்று புஷ்பா இரைஞ்சும் குரலில் கூறக் கூறச் சடா ரென்று இடுப்பில் தோலெல்லாம் பிய்க்கும் படி சங்கிலியால் அடி விழுந்தது.

''அம்மா'' என்று அவள் அருகிலிருந்த புளிய மரத்தைப் பிடித்து உட்கார்ந்து விட்டாள்.



''கட்டின புருஷன் சொன்னபடி கேப்பியா அக்கா புருஷன் சொன்னபடி கேப்பியா? கழுதை'' என்றவன் சடார் சடார் என்று அவள் உடம்பில் இன்னும் நாலஞ்சு இழுப்பு இழுத்தான். அது இடுப்பு, தொடை, முதுகு, பக்கத்துப் புளிய மரம் என்று பல இடங்களில் விழுந்து அவளிடம் மரணக் குரலை வரவழைத்தது.

அங்கங்கே நின்றிருந்த தொழிலாளர்கள் ஒரு வேடிக்கைப் பொருளாகக் கருதிப் பார்த்தார்களே தவிர, குறுக்கிட்டு, ஒரு பெண்ணின் மரண அவஸ்தையைத் தடுத்தார்கள் இல்லை.

''மரியாதையாக் கையெழுத்துப் போடு. இல்லைன்னு உன் தோலை உரிச்சு இந்தப் புளிய மரத்தில தொங்கஉட்டுட்டுப் போயிடுவேன்.. என்னை என்ன படிக்காத.....ன்னு நெனைச்சியா?...நாயே... எடுடி பேனாவை...போடுடி கையெழுத்து.''

ருத்ரமூர்த்தி மறுபடியும் செயினை ஓங்கினான்.

''எடு பேனாவை.''

புஷ்பா தன் மரண வலியினால் பிரக்ஞை இழந்து கொண்டிருந்தாள். அவளுடைய டிபன் பாக்ஸ் உருண்டு, புளிய மரத்துக்குக் கீழே பள்ளத்தில் விழுந்து கிடந்தது.

''எந்திரிடி... உசிரு போறாப்ல நடிக்கிறியா? அயோக்கியக் கழுதை...'' என்று செயினை அவளை நோக்கி வீச முயற்சி செய்கையில், பளாரென்று பல அதிரடிகளாய்த் தன் முகத்திலும் பின்புற மண்டையிலும் கழுத்துப் பட்டையிலும் கனத்த பொருளால் தான் தாக்கப்படுவதை உணர்வதற்குள் நிறைய அடிகள் விழுந்து பாதி உணர்வு அற்றுக் கீழே விழுந்தான்.

''அயோக்கிய நாயே... நடு ரோட்லே நாலு பேருக்கு முன்னாலே ஒரு பொம்பளையைத் தொட்டு அடிக்கிறது என்னடா வீரம்? இப்ப அடிடா பார்க்கலாம்'' என்று ஆக்ரோஷமாய், வெறியாய், சிம்மத்தின் குரலாய் அதுவும் பெண் குரலாய்க் கேட்டதும், முகத்தில் விழுந்த ரத்தத்தைத் துடைத்துக் கொண்டு அண்ணாந்து பார்த்தான்.

நரசிம்ம அவதாரமாய், புஷ்பாவின் அக்கா அதே மில்லில் வேலை செய்கிறவள் — கையில் டிபன் பாக்சுடன் நின்றிருந்தாள்.

''மிக்ஸி வாங்கினது ரொம்ப சௌகரியமாக இருக்கு. மிளகாய்ப் பொடி, சாம்பார் பொடி, காப்பிப் பொடி அரைப்பதெல்லாமே இதில் தான்...''

''பல்பொடி வேணும்.... இந்தச் செங்கல்லைப் பொடி பண்ணித் தாயேன்''




தன்னை அடித்தது ஒரு பெண் என்று உணர்ந்ததும், ருத்ரமூர்த்தியாகி உணர்வுகள் சிலிர்க்க எழுந்தான்.

''எம்பொண்டாட்டியை எங்கே வேணும்னாலும் அடிப்பேன். நீ எவடி கேக்க?''

''எவடி இவடின்னு பேசினியோ மொகரையைப் பேத்துக் கையில குடுத்து அனுப்பிடுவேன். உங்க நாயத்தை வீட்டுக்குள்ளாற பேசியிருந்தா எவன்டா உன்னைக் கேக்கப் போறான்? ஒரு பொம்பளைய சைக்கிள் செயினால வெறி நாயைச் சாத்துறாப்ல ரத்தம் வரக் கொதறி அடிக்கிறே... அதை இங்க எத்தனை ஆம்பிளை சிங்கங்க பாத்துட்டு நிக்குது. ஒரு அக்கிரமத்தைக் கேக்கற அளவுக்கு யாரும் ஆம்புளையாத் தோணலை. இத்தனை அயோக்கியத்தனம் செய்துட்டு, இன்னும் எம் பொண்டாட்டின்னு வேற சொல்லிக்கிற ஆம்பிளை என்ன ஆம்பிளை?''

ருத்ரமூர்த்தி தன் சட்டையின் முன்புறத்தால் வழிந்த ரத்தத்தைத் துடைத்துக் கொண்டான். நாலைந்து பெண்கள் புஷ்பாவுக்குத் தண்ணீர் கொடுத்துப் பக்கத்திலிருந்த டீக்கடைக்கு முன்னால் இருந்த பெஞ்சில் படுக்க வைத்தனர்.

''உன் தங்கச்சி நடந்துக்கற லட்சணத்துக்கு இந்த அடி போதாது. ஆம்பிளை கூட மல்லுக்கு நிக்கிற உன் புத்திதானே அவளுக்கும் இருக்கும்!'' என்று அவன் சொல்ல, புஷ்பாவின் அக்காக் காரி உமிழ்ந்தாள்.

''ஒரு பொம்பளையை மாட்டை அடிக்கிற மாதிரி சைக்கிள் சங்கிலியால நீ அடிக்கறது. மத்தவங்க கைகட்டிப் பார்த்துக்கிட்டு நிக்கறது? ஏன்டா இப்படிச் செஞ்சேன்னு கேட்டா, என்னைப் பொம்பளை இல்லேங்கிறே. ஆமா நா பொம்பளையும் இல்லே... அதே சமயம் நீ ஆம்பிளையும் இல்லே.. மரியாதையா இந்த இடத்தை உட்டுப் போயிடு. எனக்கு வர்ற ஆங்காரத்துக்கு உன்னைக் கிழிச்சுத் தோரணம் கட்டிப் போடுவேன்... நீ எல்லாம் ஒரு ஆம்பிளையா... வேட்டி கட்டி, மீசையை ஒரு மொழத்துக்கு உட்டிருக்கான்... அவனை நான் பாத்துக்கறேன்... நீ எந்தச் சீமான் கிட்ட சொல்லிக்க போ.''

''சரிதான் போடி'' என்ற ருத்ரமூர்த்தி உறுமினான்.

''சரிதான் போடா...'' என்றவள் அந்த வழியா வந்த ஆட்டோவை நிறுத்தித் தன் தங்கையை ஏற்றிக் கொண்டாள்.

''ஒண்ணு மட்டும் மனசுல வெச்சுக்க... என் தங்கச்சி கொணமாகி இதே மில்லுக்குத்தான் வேலைக்கு வருவா... மறுபடியும் அவகிட்ட ஒன்னு கின்னு பண்ணினியோ... அப்பறம் உனக்காச்சு எனக்காச்சு! இதே புளிய மரத்துக்குக் கீழேயே உன்னைச் சமாதி வெச்சுருவேன்... அவளுக்குப் புருசன்னு ஒருத்தன் இல்லாட்டியும் போகுது... யோவ் ஆட்டோ, ஆஸ்பத்திரிக்கு உடு'' என்றவள் முகத்தில் ஆண்மை பொங்கப் பேசினாள்.

அந்த மாலை நேரத்தில் அங்கிருந்த ஆண்கள் அத்தனை பேரும் தமக்குள் ஏதோ ரோஷமாய், சூடாய், சொரணையாய் ஊறுவதாய் உணர்ந்து வீடு திரும்பலானார்கள்.

## இல்லத்தரசிகளே!

**உங்கள் எல்லாவித சலவை செய்யும் பிரச்னைகளுக்கு**
**சரியான பதில் இதோ**




# டீபால்

**மல்டி–பர்ப்பஸ் திரவ டிடர்ஜெண்ட்**

**டீபால்—உலக முழுவதும் மாதர்கள் உபயோகிக்கும் உலகத் தரம் வாய்ந்த ஒரு தயாரிப்பு**

டீபால் ஷெல் நிறுவனத்தின் தரமான டிடர்ஜெண்ட் கலவைக் கூற்றைக் கொண்டுள்ளது.

**டீபால் மடிப்பு விழுவதைப் போக்கி அழுக்கைச் சுத்தம் செய்கிறது.**

அதன் சக்தி வாய்ந்த டிடர்ஜெண்ட் செயலால், டீபால் மடிப்பின் கவடு தெரியாமல் போக்கி விடுகிறது.

பாதி முயற்சியில் இரண்டு மடங்கு சுத்தம் செய்கிறது.

**டீபால்—பணத்தை மிச்சப் படுத்துகிறது**



டீபால் முழுச் செறிவுள்ளது. பெரிய அளவில் துவைக்கும் வேலைக்கு சிறிய அளவு டீபால் உபயோகித்தால் போதும்.

**டீபால்—பல பயனுள்ள சுத்தம் செய்யும் சாதனம்**

இந்த திரவ டிடர்ஜெண்ட் ஒன்றே பலவற்றின் வேலையை அற்புதமாக செய்கிறது.

விற்பனைக்கு விடுப்போர்:
**நேஷனல் ஆர்கானிக் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,**
மஃபத்லால் ஸெண்டர்,
நரிமன் பாயிண்ட்,
பம்பாய்–400 021.

**குறைந்த அளவு டீபால்**
**நிறைந்த அளவு சுத்தம் செய்கிறது!**

CHAITRA-NOC-168 TAM



# காந்திஜியின் ஒரு பிறந்த நாள்

**1931ம் ஆண்டு அண்ணல் காந்தி தமது பிறந்த தினத்தன்று இங்கிலாந்தில் இருந்தார். அன்று ஆங்கிலேயக் குழந்தைகள் அவரைப் பரவசமடையச் செய்தனர். எப்படி?**

*1931*ம் ஆண்டு ஆங்கிலேய அரசு இந்தியத் தலைவர்களுடன் கலந்து பேசி, ஒரு சமாதான முடிவுக்கு வர வட்ட மேஜை மகாநாட்டைக் கூட்டியது. மகாத்மா காந்தி பாரதத்தின் முக்கிய பிரதிநிதியாக அழைக்கப்பட்டு லண்டன் சென்றிருந்தார். அங்கிருந்த நாட்களில் பொழுது விடியுமுன்பே, சில்லென்று குளிர் காற்று வீசுவதைப் பொருட்படுத்தாது காந்தியடிகள் உடற்பயிற்சிக்காக நடக்க ஆரம்பித்து விடுவார். இங்கிலாந்தின் குளிரைப் பற்றிக் கேட்க வேண்டுமா? காலில் செருப்பு அணிந்து ஒரு கம்பளிப் போர்வை மட்டும் போர்த்திக் கொண்டு தலையில் குல்லா கூட இல்லாமல் புறப்பட்டுவிடுவார். மற்றவர் கனமான 'ஓவர் கோட், குல்லாய், காலில் மேல் ஜோடு-பூட்ஸ் இவைகளோடு குளிரில் நடுங்கிக் கொண்டிருப்பார்கள். காந்தியடியடிகள் தவறாமல் தினமும் செய்து வரும் இந்தத் தேகப் பயிற்சியைக் கண்டு அங்குள்ள ஜனங்கள் வியந்தார்கள்.

அவர் நடக்கும்போது சிறுவர்கள் அவர் முன் வந்து நிற்பார்கள். கொஞ்சம் சங்கோசம் நீங்கியதும் மெதுவாக, 'அங்கிள் காந்தி, உங்கள் பாஷை என்ன? உங்கள் ஊர் எது? உங்கள் முழுப் பெயர் என்ன?' என்றெல்லாம் கேட்டார்கள்.

அதற்கு அடிகள் பதில் சொல்லுவார்: ''எனது முழுப் பெயர் மோகன் தாஸ் கரம் சந்த் காந்தி, எனது தேசம் இந்தியா, பாஷை இந்தி.'' தேசத்தின் பொதுப் பாஷையாக அவர் கருதியதைச் சொன்னார்.

அவ்வளவுதான். குழந்தைகளும் அடிகளும் தாராளமாகப் பேசி விளையாட ஆரம்பித்து விட்டார்கள். ஆங்கிலேயக் குழந்தைகளுக்கு

⌘ 1931ல் வட்டமேஜை மாநாட்டுக்குச் செல்லும் காந்திஜிக்கு வழியனுப்பு உபசரிப்பு. மாளவியா, சரோஜினி நாயுடு, கஸ்தூரிபா காந்தி முதலியோரைப் படத்தில் காணலாம்.

அடிகள் சிற்சில இந்தியச் சொற்களைக் கற்பிப்பார். 'பாருங்கள், நீங்கள் உங்கள் தந்தையை ஃபாதர் என்கிறீர்கள். நாங்கள் 'அப்பா' என்போம். தாயை 'மதர்' என்கிறீர்கள். நாங்கள் 'அம்மா' என்று அழைப்போம்.' என்பார். இவ்வாறு பல சிறிய சொற்களைக் கற்பிப்பார். அடுத்த நாள் உலாவும்போது பிள்ளைகள் அச்சொற்களை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறார்களா என்பதை வேடிக்கையாகக் கேள்வி கேட்டுத் தெரிந்து கொள்ளுவார்.

காந்தியடிகள் தங்கியிருந்த ஜாகைக்கு அருகிலேயே ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. அதில் படிக்கும் ஒரு நான்கு வயதுச் சிறுவன் ஒரு நாள் தன் தாயிடம் ''அம்மா, இந்த காந்தி இருக்கிறாரே, அவர் என்ன சாப்பிடுகிறார்? எப்படிச் சாப்பிடுகிறார்? இவர் ஏன் இந்த அரை குறை உடை உடுத்துகிறார்?' என்று கேட்டான். தாயார் அவன் கேள்விகளுக்குப் பொறுமையோடு பதில் அளித்தது மட்டுமல்லாமல், அவரை 'காந்தி' என்று மட்டும் அழைக்காதே. அது மரியாதை அல்ல. காந்தி அங்கிள்; அல்லது மிஸ்டர் காந்தி என்று கூறு என்று சொல்லிக் கொடுத்தாள். தவிரவும் அங்கிள் காந்தி ஒரு ஞானி என்றும், நல்லவர் என்றும் எடுத்துக் கூறினாள். பையன், 'இனிமேல் அப்படியே அழைக்கிறேன்' என்றான்.

இதற்கிடையில் அக்டோபர் இரண்டாம் தேதி,—காந்தியடிகளின் பிறந்தநாள் வந்தது. சிறுவர்கள் பலர் அடிகளுக்குத் தங்களால் இயன்றதை அன்பளிப்பாக வழங்கினார்கள். மேலே குறிப்பிட்ட சிறுவன் ஒரு நாய்க் குட்டி பொம்மையைப் பரிசாக அனுப்பி அத்துடன் ஒரு கடிதமும் வைத்திருந்தான். அதில் 'என் அன்புள்ள காந்தி அங்கிள், எனது பரிசை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் பிறந்த தினமாகிய இன்று நீங்கள் எங்கள் பள்ளிக்கு அவசியம் வரவேண்டும். பள்ளிக்கூடச் சிறுவர்களாகிய நாங்கள் ஆடுவோம், பாடுவோம். நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்' என்று கண்டிருந்தது.

அன்று மாலை ஒருவர் அடிகளிடம் வந்து, 'மிஸ்டர் காந்தி! நான் உங்களிடம் ஒரு புகார் சொல்ல வேண்டியிருக்கிறது' என்றார். அடிகள் 'சொல்லுங்கள், சொல்லுங்கள்' என்றார்.

''இதோ பாருங்கள், என் மகன் ஜேன். தினமும் அதிகாலையில் எழுந்தவுடன் என்னை எழுப்பி ஒரு அடி கொடுக்கிறான். கூடவே, 'திருப்பி அடிக்காதீர்கள்! காந்தியடிகள் 'உன்னை அடித்தவர்களையும் திருப்பி அடிக்காதே' என்கிறாரல்லவா?' என்கிறான்!'' — இப்படி அந்த ஆங்கிலேயர் கூறவும் காந்தியடிகள் உட்பட எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள்.

காந்தி அடிகளின் பிறந்த நாளை ஒட்டி சிறுமி ஒருத்தி ஒரு கட்டுரை எழுதியிருந்தாள். வெகு காலத்துக்கு முன்பு மேனாட்டில் உதித்த செயின்ட் பிரான்ஸிஸ் என்ற மகானையும் காந்தியடிகளையும் ஒப்பிட்டு எழுதியிருந்தாள். ''இருவருமே பறவைகளையும் குழந்தைகளையும் நேசித்தார்கள். பணக்காரக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும் ஏழைகளுக்காக இரங்கினார்கள். தமது செல்வத்தையும் ஆடை அலங்காரங்களையும் இடரென்று நினைத்துக் கொண்டு ஓடிப்போய் ஏழைகளுக்கு செயின்ட் பிரான்ஸிஸ் தத்தம் செய்தார். அது போலவே அங்கிள் காந்தியும் வசதிகளைத் துறந்து, எளிய வாழ்க்கை ஏற்றுக் கொண்டிருக்கிறார். செயின்ட் பிரான்ஸிஸைப் போலவே காந்தி அங்கிளும் குடிசையில் வாழ விரும்புகிறார். எளிய உடையே உடுத்துகிறார். செயின்ட் பிரான்ஸிஸைப் போலவே காந்தி அங்கிளும் தமக்கென்று ஒன்றுமே வைத்துக் கொள்ளவில்லை. மது அருந்துவது இல்லை'' என்று எழுதியிருந்தாள்.

அவர் விடுதியின் வராந்தாவில் வந்து நின்றால் அந்தப் பக்கத்து மக்கள் ஆண், பெண், குழந்தைகள் அடங்கலாக அனைவரும் அவரைப் பார்க்கக் கீழே கூடிவிடுவார்கள். ஒருத்தி வியந்து சொன்னாள்: ''பத்திரிகைக்காரர்கள் எதை எதையோ மனத்தில் தோன்றியதை எழுதி விடுகிறார்களே. காந்தி முக லட்சணமே இல்லாதவர் என்றும் குட்டையானவர் என்றும், கறுப்பு என்றும் எழுதியிருந்தார்களே. எவ்வளவு அழகாக, கம்பீரமாக, வெள்ளைக் கோதுமை வர்ணத்தவராக, இனிமையான முகப் பொலிவுடன் இருக்கிறார்!''

சில தினங்களுக்குள்ளேயே எளியவர் வாழ்ந்த அந்தப் பகுதிக் குழந்தைகள், பெரியவர்கள் ஆண், பெண் அனைவர் மனத்தையும் காந்தியடிகள் கவர்ந்து விட்டார்.

**ராம் நாராயண் பாட்டக் எழுதிய காந்தியடிகளின் வாழ்க்கை வரலாறு 'காந்தி-கங்கா' என்னும் குஜராத்தி நூலிலிருந்து இப்பகுதியைத் தமிழாக்கம் செய்தவர்: லக்ஷ்மி தேவதாஸ் காந்தி.**

அவன் : ''இந்தமாதிரி ரஸம் என் ஆயுளில் நான் குடிச்சதேயில்லே, பிரமாதம்னுதானே சொன்னேன்... உன் பெண்டாட்டி எதுக்குப்பா முகவாயைத் தோளில் இடிச்சு நொடிச்சுக்கிட்டுப் போறா, கோபமாக?''

இவன் : ''அவள் கொடுத்தது காப்பியாம்!''

-உ. ராஜாஜி



# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.

**பாமோலிவ் ஷாம்பூ:**
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்.

Palmolive
Shampoo

NEW
Palmolive
EGG
Shampoo

பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது, பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK6E.PS.7 TM

பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

பற்கள், ஈறுகளின் முறையான பராமரிப்பிற்கு, பற்களை பிரஷ் செய்வது போன்றே ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் அவசியமாகும்

# போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் உபயோகியுங்கள்

இது உங்கள் பற்களை பிரஷ் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுப்பதற்கேற்ப விசேட முறையில் உருவாக்கப்பட்டது

மென்மையான வெண்ணிறக் குச்சங்கள் உங்கள் ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கின்றன

உறுதியான நீல நிறக் குச்சங்கள் உங்கள் பற்களைத் துலக்குகின்றன

## போர்ஹென்ஸ்

## டூத்பிரஷ்

குடும்பத்தினர் எல்லோருக்கும்
அடல்ட் (மீடியம், சாஃப்ட்),
ஜூனியர், பேபி

Regd. T.M: Geoffrey Manners & Co. Ltd.

256F-203 TAM

# உடும்புகள்

டி.கே.டி.துரைராஜன்

சிவசங்கர் இன்று ரிடையர் ஆகிறார்.

இருபத்தேழு வருஷங்களாக — இந்தக் கம்பெனி ஆரம்பித்த நாளிலிருந்து — இதன் நிர்வாகத்தோடு இரண்டறக் கலந்துவிட்ட மானேஜிங் டைரக்டர் சிவசங்கர்.

இன்று தமது பொறுப்பிலிருந்து ஓய்வு பெறுகிறார்.

அவரால் நினைத்துப் பார்க்கவே முடிய வில்லை. தமது வீட்டை விட அவர் இந்த அலுவலகக் கட்டிடத்தை அதிகமாக நேசித் தார். தம் வீட்டில் உள்ள பூஜை அறையைக் காட்டிலும் அவர் தமது ஆபீஸ் அறையின் மேல் அதிகமாகப் பக்தி கொண்டிருந்தார்.

இன்று அந்த நேசம் — பக்தி எல்லாவற்றை யும் மனத்திலிருந்து இறக்கி வைத்துவிட்டு ஒரேயடியாக வெளியேறப் போகிறார்.

இப்போது அவருக்கு வயது அறுபத் திரண்டு. ஆனால் யாரும் அப்படிச் சொல்ல மாட்டார்கள். நாற்பத்தைந்து ஐம்பதுக்குள் மதிப்பிடுவார்கள். உடம்பிலும், நடையுடை பாவனைகளிலும் இளமை ஊஞ்சலாடவில்லை என்றாலும் நிச்சயம் முதுமை கோலூன்ற வில்லை. இன்னும் பத்து வருடங்கள் அவர் வேலை செய்யலாம். அப்படி ஒரு தினவு இருந்தது. தம் அறைக்குள் இருந்தபடியே ஒவ்வொரு பெயராகக் கத்தி அழைக்கலாம். அதற்கு 'தம்' இருந்தது. லிப்ட் வேலை செய்யாத நாட்களில் நாலு மாடிகள் நடந்தே ஏறி வரலாம். அதற்கு 'ஸ்டெமினா' இருந்தது.

இவ்வளவு இருந்தும் அவர் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும்.

இ டே ஆஃப் ரிடையர் மெண்ட்.

இதோ! இன்னும் கொஞ்ச நேரத்தில் தம் முடைய பொறுப்புக்களை சுந்தரராமனிடம் ஒப்படைத்துவிட்டு — தமது ஆசனத்தில் சுந்தரராமனை உட்கார்த்திவிட்டு—

மை குட்னஸ்... எல்லாமே அவர் கையை விட்டுப் போகிறது!

தம் ஆசனத்தில் (கென்னடி சேர் — கறுப்பு நிறம்) உட்கார்ந்தபடி அந்த அறையை ஒரு முறை பார்த்தார். வீட்டில் தலை வலிக்கிற மாதிரி — குளிர் ஜுரம் மாதிரி ஓர் உணர்வு வந்தால். வாரிச் சுருட்டிக் கொண்டு ஆபி சுக்கு வந்து இந்த அறைக்குள் நுழைந்து விட்டால் போதும்...

அசதியும், ஆயாசமும், வலிகளும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய், புதிய மனிதனாக உருவெடுத்து நிற்பார்.

அப்படியொரு மூலிகை அறை. இன்று இந்த அறையை விட்டு — இதன் சுவர்களில் தொங்கும் படங்கள் — ஸோபாக்கள் — பீரோக்கள் எல்லாவற்றிடமும் விடைபெற் றுக் கொண்டு—

ஆ... விடைபெற்றுக் கொண்டு என்றதும் அவருக்கு ஏதோ ஒன்று நினைவுக்கு வந்தது.

இண்டர்காமில் தமது செக்ரட்டரியை அழைத்தார்.

''எஸ் சார்...'' என்றாள் சுமித்ரா.

''நான் சொன்னது ஞாபகம் இருக்கில் லையா? நோ செண்ட் ஆஃப்... நோபார்ட்டி... நோ குரூப் போட்டோ... மானேஜர் சந் தானம் கிட்டச் சொல்லிடு...''

''சொல்லிட்டேன் சார்...'' என்றாள் சுமித்ரா. அவள் குரல் கிணற்றுக்குள் ளிருந்து வருகிற மாதிரி இருந்தது.

''என்ன ஆச்சு?... வாட் இஸ் ராங் வித் யூ?''

''ஒண்ணுமில்லே சார்...''

''பின்னே ஏன் டல்லா உயிர் இல்லாமல் பேசறே?''

''பின்னே என்ன ஸார்... ஒரு செண்ட் ஆஃப்தரக்கூடஎங்களைஅனுமதிக்கலேன்னா...''

''அட சட்... அந்த பார்மாலிடி யெல் லாம் எதுக்கு? டேக் இட் ஈஸி கேர்ள்...''



ரிசீவரை வைத்துவிட்டார் சிவசங்கர். 'டேக் இட் ஈஸி' பிறத்தியாருக்கு அவரால் சொல்ல முடிந்தது. ஆனால் அவரால் அப்படி இருக்க முடியவில்லை. எங்கே சென்ட் ஆஃப் — குரூப் போட்டோ — பார்ட்டி என்று வைத்து, அந்தச் சமயத்தில் மனசு தாங்காமல் நெர்வஸ் பிரேக் டௌன் ஆகிவிடுமோ என்ற அமானுஷ்யமான ஒரு பயம் வேறு....

அவ்வளவுதான். அந்தப் பயம் வந்தவுடன்...

இன்று எவ்வளவுக்கெவ்வளவு நேரம் அதிகமாக அந்த அறைக்குள் இருக்க வேண்டும் என்று அவர் ஆசைப்பட்டாரோ, அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரம் வெளியேறிவிடவேண்டும் என்ற துடிப்பு.

மறுபடியும் இன்டர்காமில் சுமித்ராவை அழைத்தார். இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்தார். சரியாக 1.35க்குத் தாம் ரிடையராவதாக.

**1.**35.

அறையின் கதவு திறந்ததும் அரைத் தூக்கலாகத் தலையை நிமிர்த்திப் பார்த்தார் சிவசங்கர்.

முதலில் சுமித்ரா... வாட் லவ்லி கேர்ள்.. அடுத்தது மானேஜர், சந்தானம். பிறகு எக்ஸிக்யூடிவ் ட்ரெய்னி சேகர்... கடைசியாக சுந்தரராமன் — கையில் ஒரு ஜரிகை மாலையுடன்.

சிவசங்கர் மெதுவாக எழுந்தார். அடைத்துப் போயிருக்கும் தொண்டையைச் செருமிச் சரிசெய்து கொண்டு ''வெல்... ஐ ஆம் ரிடையர்ட்.....'' என்று சுந்தரராமனை நோக்கி தமது இரு கைகளையும் நீட்டினார். ''சுந்தரராமன்... யூ கேன் ஆக்குபை திஸ் சீட்...'' என்று சற்று விலகி நின்றார்.

இட்ட அடி நோக, எடுத்த அடி கொப்பளிக்க, சிவசங்கரை நோக்கி மெதுவாக வந்தார் சுந்தரராமன். மாலையை அணிவித்தார். கால்களைத் தொட்டு வணங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு எழுந்து நின்றார்.

''விஷ் யூ ஆல் தி பெஸ்ட்...''

பந்தலில் ,மணப் பெண்ணை உட்கார வைப்பது போல சுந்தரராமனை எம்.டி. ஆசனத்தில் அமர்த்திவிட்டு—

அதற்கு மேல் ஒரு நிமிஷம் கூட நிற்க முடியாதவராக அந்த அறையை விட்டு அலுவலகத்திலிருந்து — நான்காவது மாடியிலிருந்து வேக வேகமாக இறங்கித் தமது காருக்கு வந்தார் சிவசங்கர்.

**வீ**ட்டில்—

அவர் மனைவி அவரை எதிர்பார்க்கவில்லை. காலையில் போகும்போதே சொல்லிவிட்டுத்தான் போனார்.

''இன்னைக்கு நான் ரிடையர் ஆறேன்... வர்றதுக்குக் கொஞ்சம் லேட் ஆகும்...'' என்று.

ஆனால் இரண்டு மணிக்கே வந்து நிற்கிறாரே!

''சாப்பிட்டீங்களா?'' என்று கேட்டாள் மனைவி லக்ஷ்மி.

''இல்லே....''

''சாப்பாடு அனுப்பினேனே....''

''சாப்பிட மனசில்லே....''

''ஏன்?''

''ஐ டோண்ட் நோ... என்னவோ மாதிரி இருந்தது. இருபத்தேழு வருஷமா இருந்த கம்பெனியை விட்டுட்டு....'' தழுதழுக்கும் குரலில் அவர் சொல்லி முடிப்பதற்கு முன்—

''அட ராமா...ராமா...'' என்று குறுக்கிட்டாள் லக்ஷ்மி. ''உங்களை நினைச்சா எனக்குச் சிரிப்புத்தான் வருது...''

''ஏன்?''

''உங்களை யார் ரிடையராகச் சொன்னது?''

''வாட் டு யூ மீன்?''

''இது உங்க கம்பெனி... நீங்க வச்சது தான் சட்டம்... கடைசிவரைக்கும் எம்.டி.யாக இருந்துட்டுப் போகலாம்... அதை விட்டுட்டு....''

''நோ...நோ... அது ராங் அப்ரோச்... என் கம்பெனிங்கிறதாலே நானே கடைசி வரைக்கும் உக்கார்ந்து அதிகாரம் பண்ணிக்கிட்டிருந்தா எப்பிடி... மற்றவங்களுக்கும் ஒரு சான்ஸ் தரணும்... இப்ப நம்ம தேசத்தைப் பிடிச்சிருக்கிற பெரிய வியாதியே மற்றவங்களுக்குச் சான்ஸ் தராமே ஒவ்வொருத்தரும் உடும்பு மாதிரி கெட்டியா பிடிச்சுக்கிட்டு இருக்கிறதுதான். அந்த வியாதி எனக்கும் வரக்கூடாது. அதனாலே தான் சுந்தரராமனை எம். டி. யாக்கினேன். இருபத்தைஞ்சு வருஷமா நம்ம கம்பெனிக்கு உழைச்சவர்...''

'பின்னே எதுக்காக ரிடையர் ஆயிட்டேன்னு இடிந்து புலம்பறீங்க...' என்று கேட்க நினைத்தாள் லக்ஷ்மி. ஆனால் கேட்கவில்லை.

அதுதான் மனித சுபாவம் என்று அந்த அம்மாளுக்குத் தெரியும்.

---

ஒருவர் : என்னங்க, திடீர்னு ரெண்டு பேரு தலைவரைத் தூக்கிட்டு நிற்கிறாங்க?

மற்றவர் : 'என்னையே எடுத்துக் கொள்ளுங்கள், என்னையே எடுத்துக் கொள்ளுங்கள்'னு அடிக்கடி அவர் உதாரணம் காட்டிப் பேசியதைத் தப்பாப் புரிஞ்சிட்டாங்க போலிருக்கு!

- இரத்தினம்

---



# குமரனை அணிந்திடும் நேரம் குதூகலம் பொங்கிடும் நேரம்.

## குமரன் சில்க்ஸ்

சுபதினங்கள்,
மங்கள நிகழ்ச்சிகள்,
பண்டிகைகள், பார்ட்டிகள்,
குதூகலமான, கோலாகல
இன்பமயமான எந்த
நாளும், நிகழ்ச்சியும்
முழுமை பெறுவது —
குமரன்.

அசல் பட்டாடைகளை
அணிந்து பவனிவரும்
போதுதான் இது அத்தனை
ஆரணங்குகளும் அறிந்தி
விட்டுச் சொல்லும் அழகு
இரகசியம். காஞ்சிபுரம்,
ஆரணி, தர்மாவரம்,
பனாரஸ் போன்ற அசல்
பட்டின் அத்தனை
வகைகளும் கண்டு மகிழ —
குமரன் கலைக்கூடம்.

## குமரன் சில்க்ஸ்

(ஏர்கண்டிஷண்ட்)
12, நாகேஸ்வரராவ் ரோடு,
பனகல் பார்க் எதிரில், தியாகராயநகர்,
சென்னை-600 017. தொலைபேசி: 443544.



UIPC: KS: 176

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

**10**



















வாரமா? கையில இருக்கிற பணம் தீர்ந்தா கண்ணை மூடிக்கிட்டு வீட்டுக்கு வர வேண்டியதுதானே?
வாசலில் டாக்ஸி வந்து நிற்க, பன்னீரும் அமுதாவும் இறங்கி வந்தனர்.


வாங்க வாங்க. இப்பத்தான் உங்களைப் பத்திப் பேசிக்கிட்டிருந்தோம். வந்து சேர்ந்துட்டீங்க. நூறு ஆயுசு. நூற்றாண்டு விழா கூட அட்வான்ஸா கொண்டாடிடலாம்!
என்னடா, ஊட்டி கொடைக்கானல் எல்லாம் நல்லா பாத்தியா?


அவன் ஊரை யெல்லாம் எங்க பாத்திருக்கப் போறான்? இவளு முகத்தையே இல்ல பார்த்துக் கிட்டிருந்திருப் பான்!
ஐயே, போங்க மாமா!
அம்மா அமுது, நீ வேலை செய்யிற ஆபீசு எங்க இருக்கு, என்ன பேரு எல்லாம் இவருக்குத் தெரியுமாம்மா?


எனக்குத்தானே? ஹூம்... தெரியுமே! ஆதிமூலம் அன்ட் கம்பெனி. அட்ரஸ் எல்லாம் தனியா எழுதி வச்சிருக் கேன்!
என்னது! ஆதிமூலம் கம்பெனியா! ஏதோ கபாலி ஏஜென்ஸின்னு இல்ல அன்னிக்குச் சொன்னீங்க?
ஆமாம்மா! கபாலி ஏஜென்ஸியே தான்! அப்பா, வந்த எல்லாம் மறந்துடும்!


இதுல என்ன தப்பு? ஆதிமூலம் கம்பெனி வச்சிருக்கிறவர்தான் கபாலி ஏஜென்ஸியும் வச்சிருக்காரு! ஆதிமூலம்னு என்ன, கபாலின்னு என்ன, எல்லாம் ஒண்ணுதானே!
ஆமா அத்தே, கபாலி ஏஜென்ஸில டைப்பிஸ்ட்டா சேர்றதுக்கு முன்னாடி ஆதிமூலம் கம்பெனில தான் இருந்தேன்!
சரி, இன்னிக்கு ரெஸ்ட் எடுத்துக் தூங்கு, ரெண்டு பேரும். நாளை யிலேர்ந்துதான் இருக்கவே இருக்கு, ஆபீசு— கலாட்டா எல்லாம்!
தொடரும்



# பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்

## 8

'திருப்பம்' என்று சொன்னேன். ஆம்; அது திருப்பம்தான். திரு எம். ஜி. ஆர். அவர்களின் செல்வாக்கு என்பது அவருடைய சுய சக்தியால் அமைந்தது என்பதை நிரூபித்த திருப்பம் அது. கழகத்தால் பெற்ற செல்வாக்கு என்றால், கழகத்திலிருந்து விடுபட்டதும் அது அகன்றுவிட வேண்டும்.

அப்படி ஆகவில்லை. செல்வாக்கு அதிகமாகத் தொடங்கியது. ஆகவே இது காலம் செய்த முடிவு என்று வரலாற்றுக் கணிப்பாளர்கள் விமரிசனம் செய்தார்கள்.

அரசியலில் ஏற்பட்ட இந்தத் திருப்பத்தின்போது, அதன் மூலம் கலைத் துறையில் திரு எம்.ஜி.ஆர். அவர்களுக்கு ஏற்படக்கூடிய மாற்றம் என்னவாயிருக்கும் என்ற கேள்விக்கு விடை வழங்குகிற பொறுப்பை ஏற்றிருந்தது 'இதய வீணை' படம்.

கழகத்தில் இல்லாத, தனிப்பட்ட எம்.ஜி. ஆரின் படமாக வந்த முதல் படம் அது.

எதிர்ப்பாளர்கள் வழக்கம்போல் பேசினர். வழக்கம் போலவே தோல்வி கண்டார்கள். 'இதய வீணை' வெற்றி நாதம் முழங்கிற்று. 'எம். ஜி. ஆர். என்கிற சக்தி தனிச் சக்தி' என்பதை ஊர்ஜிதப்படுத்தியது.

கழகத்திலிருந்து வெளிவந்த பிறகு திரு எம். ஜி. ஆர். அவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட பல திருப்பங்கள் அரசியல் முக்கியத்துவம் உள்ளவை. கலைத் துறையில் தொடர்ந்து அவர் பெற்ற சிறப்புக்களை மட்டுமே இப்போது இங்கே சொல்கிறேன்.

''உலகம் சுற்றும் வாலிபன்'' என்கிற படத்தைத் தயாரிக்க எண்ணினார். அப்போது ஜப்பானில் 'எக்ஸ்போ 70' என்கிற உலகப் பொருட்காட்சி நடைபெறத் தொடங்கிற்று. திரு எம். ஜி. ஆர். அவர்கள் தாமே தயாரிப்பாளர், இயக்குநர், கதாநாயகர் (இரு வேடங்கள்) ஆகிய எல்லாப் பொறுப்புக்களையும் ஏற்றுக் கொண்டு அந்தப் படத்தை ஜப்பானில் எடுப்பது என்று முடிவு செய்தார்.

வித்துவான் வே. லட்சுமணன்

அது ஒரு சாதாரணமான பணி என்று கருத முடியாது. பெரும் பணி என்று சொன்னாலும் போதாது. மிகக் கடினமான பணி; பல கோணங்களிலும் செயலாற்றி முடிக்கப் படவேண்டிய பணி.

இதுபோன்ற பணிகளில் ஈடுபட்டு வெற்றி கண்டால் தானே சாதனை செய்த சிறப்புக்குப் பாத்திரமாக முடியும்!

'எக்ஸ்போ' என்பது எவ்வளவு பேர்கள் கூட்டம் கூட்டமாகக் காண வரக்கூடிய காட்சி! அங்கே போய்ப் படமெடுப்பதாவது!''—

இப்படிக் கேட்டவர்கள் உண்டு.

அவர்களுக்கு அப்படிக் கேட்டால்தான் தூக்கம் வரும்.

எதையும் எவர் பேச்சையும் பொருட்படுத்துவது அவசியம்தான். ஆனால் எதைச் செய்வது என்பது அவரவரின் தனி உரிமை.

திரு எம். ஜி. ஆர். அவர்கள் அசாத்திய மான துணிச்சல், தன்னம்பிக்கை ஆகிய இவற்றை அடிப்படை பலமாகக் கொண்டு எக்ஸ்போ காட்சிக் கூடங்களிலும் அந்தச் சூழ்நிலைகளிலும் படம் எடுக்க ஆரம்பித்து விட்டார்!

விதம் விதமான கோணங்கள், உத்திகள் எல்லாவற்றையும் பயன்படுத்தினார். பல்லாண்டுகளாகப் பெற்றிருந்த அனுபவத்தின் பயன் அது; பழுத்த ஞானத்தின் பரிணமிப்பு அது.

கதைகூடஎழுத்து வடிவில் தயாராகவில்லை. கதை என்ன என்பது அவருக்குத்தான் தெரியும். அவரால் உருவாக்கப்பட்டு அவரது உள்ளத்திலேயே வளர்ந்து கொண்டிருந்த கதை அது. அவ்வப்போது அதற்கு வரி வடிவம் வடித்துத் தருவார். இப்படியே முற்றுப்பெற்ற படம் இது.

எக்ஸ்போ கண்காட்சிகளை ஒளிப்பதிவுக் கருவியின் மூலம் எப்படி எப்படி யெல்லாம் பயன்படுத்த முடியுமோ அப்படி அனைத்து வகைகளிலும் பயன்படுத்திக் கொண்டார் என்று கூற வேண்டும்.

---

''போயும், போயும் பத்திரிகை ஆசிரியர் மகளைத் திருமணம் செய்து கொள்ளச் சம்மதித்தது தப்பாகிவிட்டது....''

''ஏன்...? என்னவிட்டது இப்போது?''

''அவர் மகள் கல்யாணப் பத்திரிகையில் கூட அடியில்.... 'பெயர்கள் சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே, திருத்தி அமைக்கவும் மாற்றவும் எல்லா உரிமைகளும் ஆசிரியருக்கு உண்டு!' என்று போட்டுத் தொலைத்திருக்கிறார்!''

---



படம் வெளிவந்து மாபெரும் வெற்றி கண்டது.

''எப்பேர்ப்பட்ட சாதனை'' என்று பலர் புகழ்ந்தார்கள்.

''தமிழ்த் திரையுலகத்தின் சிறப்புக்கு மக்கள் திலகம் வழங்கிய மகத்தான கௌரவம் 'உலகம் சுற்றும் வாலிபன்' '' என்றார்கள்.

படத்தின் பாடல்கள் பதிவு ஏ. வி. எம். ஸ்டுடியோவில் முன்னதாகவே நடைபெற்றது. தொடர்ந்து எல்லாப் பாடல்களும் ஒவ்வொன்றாகப் பதிவு செய்யப்பட்டன.

''இசை வெள்ளி'' என்பார்கள். அப்படித் தான் நடந்தது. இந்தப் படத்தின் பாடல்கள் எல்லாமே சிரஞ்சீவித்துவம் பெற்றவை என்பதை நாம் நன்றாக அறிவோம். அந்த வகையில் மேன்மை பெற்ற பாடல்கள் குறுகிய காலத்தில் அவசரம் அவசரமாக உருவாக்கப்பட்டன என்பதைச் சொல்ல வேண்டும்.

ஏனென்றால் ஜப்பானுக்குப் புறப்படும் முன்னதாக எல்லாப் பாடல்களையும் தயார் செய்தால்தான் படப்பிடிப்புக்கு அவற்றைக் கையோடு எடுத்துக் கொண்டு போக வசதியாக இருக்கும். பொன்மனச் செம்மலின் நேர் பார்வையில் அவருடைய கருத்துக்களின் பிரதிபலிப்பாகப் பாடல்கள் புனையப் பட்டன.

அடுத்தபடியாக இந்தப்படத்தின் தொடக்கத்தில் நிகழ்ந்த சில சாதனைகளைச் சொல்லவும் நினைக்கிறேன்.

''உலகம் சுற்றும் வாலிபன்'' என்ற படத்தை எடுக்கப் போவதாக அவர் அறிவித்தவுடனேயே எல்லா 'ஏரியா'க்களுக்கும் விநியோகஸ்தர்கள் போட்டி போட்டுக் கொண்டு வந்து விட்டார்கள்.

எக்ஸ்போ பொருட் காட்சியில் மக்கள் திலகமும் மற்றையோரும் நடித்த காட்சிகளின் 'ஸ்டில்' பார்வைக்கு வந்ததும் மேலும் அதிகமான ஆர்வம் ஏற்படலாயிற்று. இதனால் விளைந்த அதிசயம் என்ன தெரியுமா?

முன் பணம் கொடுத்து ஏற்கனவே உரிமை பெற்றிருந்த விநியோகஸ்தர்கள் சிலர், தாங்கள் வாங்கிய விலைக்கு மிகவும் அதிகமான விலை பெற்றுக் கொண்டு, மற்றவர்களிடம் விநியோக உரிமை அளித்தார்கள்!

படம் இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது. முடியப் பல காலம் ஆகும்.

படம் எடுக்கிறவருக்கோ ஆதாயம் எப்படி, எவ்வளவு என்பது புரியாத நிலை. ஆனால் விநியோகஸ்தர்களுக்கு முன் , கூட்டியே ஆதாயம் வரத் தொடங்கி விட்டதென்றால் இது ஒரு புரட்சிகரமான அதிசயம்தானே!

திரை உலகம் செழிப்படைவதற்கு இப்படிப்பட்ட சாதனைகளைச் செய்தவர் திரு எம். ஜி. ஆர். அவர்கள்.

ஒருபுறம் கலை வளரச் செய்தார்; மறுபுறம் தொழில் வளரச் செய்தார்! இதனால் தமிழகத் திரை உலகத்தில் சுபிட்சம் கூடிக் கொண்டே வந்தது. இதை மறக்க முடியாது: மறுக்கவும் இயலாது.

(தொடரும்)

# சுவர்ணமுகி

ஸ்ரீ வேணுகோபாலன்

## 27

......ஒருநாள்
திரும்புமோ? எப்படியோ? தெய்வமே என்றேன்
கரும்பு மதனும் வரக்கண்டேன்;

- ராஜேந்திரன்
தூவில்விடுதூது

சுவர்ணமுகியும் செல்வியும் ஓட்டமாக ஓடினார்கள்.

போகிற வழியெல்லாம் வழுக்கல். இருவரும் கவனமுடன் காலை வைத்துத் துள்ளியும் தாவியும் ஓடினார்கள்.

சீக்கிரம், அந்தப் புதர்க்காடு அவர்களை அழைத்தது. ஒரு காலத்தில் பச்சைப் பசேர் என்று இருந்த காடு. இப்போது குச்சும் இலைகளுமாக வெறும் இலைக் காம்புகள் மட்டுமே தெரிந்தன. கொத்துக் கொத்தான புதர்கள்.

அவைகள் ஊடே புகுந்ததும் சிறிது ஆசுவாசம் ஏற்பட்டது.

திரும்பிப் பார்த்தார்கள்.

அடேயப்பா! மாளிகையை விட்டு எவ்வளவு தூரம் வந்து விட்டார்கள்!

இனிமேல்யாராவது தேடிவந்து அவர்களைக் கண்டுபிடிப்பது நிச்சயம் முடியாது.

இருவரும் மேலும் நடந்து ஒரு பாறைக் கூட்டத்தின் பக்கம் வந்தார்கள். மழைக் கால ஓடை ஒன்று அருகே உற்பத்தியாகியிருந்தது. சத்தமில்லாமல் அழகாக வழிந்து ஓடிக் கொண்டிருந்தது.

ஒரு மறைப்பான பாறை இடுக்கில் இருவரும் அமர்ந்தார்கள்.

சுவர்ணமுகி ஆசுவாசத்துடன் காலை மடித்துக் கொண்டதும் அந்த நினைவு வந்தது. ஸ்ரீரங்கன் என்ன ஆகியிருப்பார்? எதிர்த்துச் சண்டை போட்டிருப்பாரா அல்லது...

உடம்பு சரியில்லை என்றார்களே? இப்போது எப்படி இருப்பார்?

அவரைப் போய்த் தவறாக நினைத்தோமே! இப்போது பார்த்தால் அவளுக்காகஅல்லவா அவர் போராடுகிறார்! அவர் வார்த்தையில் நம்பிக்கை வைக்காமல் இருந்து விட்டோமே! இப்போது நினைத்தால் எவ்வளவு அவமானமாக இருக்கிறது!

உலகம்தான் எவ்வளவு கெட்டுவிட்டது? ஒரு தாய் தன் மகளோடு சண்டை போடுகிறாள். அதிசயமாக இல்லை? கலி முற்றி விட்டது.

ஒரு விஷயம் சுவர்ணமுகிக்குத் தெளிவாகப் பட்டது.

எல்லோரும் அவளை வேட்டையாட ஆரம்பித்து விட்டார்கள்.

அவளைப் பிடித்துத் தங்கள் வசமாக்கிக் கொள்வதன் மூலம் நாட்டின் சிங்காதனத்தை ஒவ்வொருவரும் பறிக்க விரும்புகிறார்கள்.

எல்லோருக்கும் அவள் ஓர் இலக்காகப் போய்விட்டாள்.

நிம்மதியாக இருந்த அவள் வாழ்க்கைக்கு இப்போது சோதனை வந்து விட்டது.

இருட்டும் வரை அங்கேயே இருந்தார்கள். பிறகு செல்வி மட்டும் அந்த இருட்டில் மெள்ள நடந்து போய்ச் சுற்றுப்புறங்களை நோட்டம் பார்த்துவிட்டு வந்தாள்.

யாரும் அவர்களைத் தேடி வரவில்லை என்று தெரிந்ததும் நிம்மதியாக அங்கேயே இரவைக் கழிக்கத் தீர்மானித்தார்கள்.

பொழுது விடிந்ததும் வெகு நேரம் வரை அங்கேயே தங்கி யிருந்தார்கள். பிறகு செல்வி 'பார்த்துட்டு வருகிறேன்' என்று வெளியே புறப்பட்டுப் போனாள்.

வெகு நேரம் கழித்துத் திரும்பி வந்தாள். ''அம்மா! அவர் மட்டும் இருக்காரம்மா!'' என்றாள் பரபரப்புடன்.

''யாரு? ஸ்ரீரங்கரா?'' என்றாள் சுவர்ணமுகி.

''ஆமாங்க!''

''வேறெ யாரும் இல்லையம்மா. போயிட்டாங்க!''

சுவர்ணமுகி எழுந்தாள். ''வா, செல்வி போகலாம்'' என்று புறப்பட்டாள்.

இருவரும் சுற்றுப்புறங்களைப் பார்த்துக் கொண்டே நடந்தார்கள்.



மாளிகையை நெருங்க நெருங்க சுவர்ண முகிக்குப் பதற்றம் ஏற்பட்டது.

முகப்பில் சிறிது தயங்கி நின்று கடைசியில் உள்ளே போனாள்.

கூடத்துக்குள் போய் அறைக்குள் அவசரமாகப் பிரவேசித்தாள்.

உள்ளே பார்த்ததும் கண்கள் ஊன்றி நின்றன.

ஸ்ரீரங்கன் ஈனமாகப் படுத்திருந்தான்.

உடம்பு வெகுவாக மெலிந்திருந்தது. கைகளும் கால்களும் நிழலாக வாடியிருந்தன. முகம் கறுத்திருக்க, விழிகள் ஆழ்ந்த பள்ளத்துள் மூடியிருந்தன.

மெள்ள அடியிட்டு அருகே வந்தாள். மண்டியிட்டாள். ''ஐயா!'' என்றாள் கருணையோடு.

அவன் விழிக்கவில்லை. இன்னும் உறங்கிக் கொண்டிருந்தான்.

''ஐயா!'' என்றாள் மீண்டும்.

பிறகு தனது மெல்லிய நீண்ட விரல்களை அவன் நெஞ்சில் வைத்து மெதுவாக அசக்கினாள். ''ஐயா!''

ஸ்ரீரங்கன் மெள்ளமாகக் கண்களை விழித்தான். முதலில் வெளிச்சத்தைப் பார்த்ததும் கண் கூசியது. பைய பைய நிதானமாக்கிக் கொண்டு பார்க்க, அவள் உருவம் தெரிந்தது.

ஒரு நொடி நேரம் குழம்பியது.

''நீங்களா?'' என்றான் ஆச்சரியம் தளிர்க்க.

''ஆமாம், ஐயா! உங்களுக்கு உடம்பு சரியில்லையே! உங்களைத் தனியாக விட்டுப் போய்விட்டார்களே!'' என்றாள்.

அவன் நெற்றி வெறுப்பில் சிறிது சுருங்கியது. ''நான்தான் போகச் சொன்னேன். வரவில்லை என்றுசொல்லிவிட்டேன். பாவிகள் என் தாயாரின் மனத்தையும் கெடுத்து விட்டார்கள். அவளும் அவர்கள் சொல் பேச்சைக் கேட்டுக் கொள்கிறாள்'' என்றான்.

பிறகு, ''நீங்கள் சாப்பிட்டீர்களா, தூங்கினீர்களா?'' என்று அவளைக் குசலம் விசாரிக்க ஆரம்பித்தான்.

சுவர்ணமுகிக்கு வேதனை பொத்துக் கொண்டு வந்தது. கண்ணில் ஒரு பொட்டு நீர் துளிர்த்தது.

''ஐயா, நாங்கள் ஓடிவிட்டோம். இரவு முழுவதும் வெளியில் இருந்துவிட்டு இப்போதான் வருகிறோம். ஐயா! உங்களை இப்போது தான் புரிந்து கொண்டேன். நீங்கள் உண்மையிலேயே எனக்கு அனுகூலமாக இருந்திருக்கிறீர்கள். ஆரம்பத்தில் உங்களைச் சந்தேகித்து விட்டேன். என்னைப் பொறுத்தருளுங்கள்! ஐயா, எழுந்திருங்கள்! நான் கஞ்சி வைத்துக் கொண்டு வருகிறேன்'' என்று கூறி எழுந்தாள் அவள்.

அவன் தடுப்பதையும் பொருட்படுத்தாமல் உள்ளே போனாள். இதற்குள் செல்வி அடுப்பு மூட்டியிருந்தாள். எல்லாம் ஈர விறகுகள். வீடு முழுதும் புகைந்தது.

அரை முகூர்த்த நேரத்தில் சூடாகக் கஞ்சியை ஆற்றி அவள் கொணர்ந்தாள்.

ஸ்ரீரங்கன் சுவர் ஓரம் சாய்வாக அமர்ந்து வெறுமையாகப் பார்த்திருந்தான்.

அவள் வந்து உட்கார்ந்ததும், அவன் மெள்ள அவள் பக்கம் திரும்பி, கஞ்சியை வாங்கிக் கொண்டான்.

மெதுவாகச் சூடு பார்த்து ஒரு மடக்குப் பருகியதும் அவன் முகம் தெளிவாகியது. ''எனக்கு....'' என்று ஆரம்பித்துச் சில கணங்கள் நிறுத்தினான். சுவர்ணமுகி ஆவலுடன் அவனைப் பார்த்தாள். ''எனக்கு ஒரே ஒரு வருத்தம்.....'' என்றான் அவன்.

''என்ன சொல்லுங்கள்?'' என்றாள் அவள்.

''நீங்கள் இன்னும் யார் என்பதை என்னிடமிருந்து மறைக்கிறீர்கள். அது என் மனத்தைப் புண்படுத்துகிறது!'' என்றான்.

சுவர்ணமுகி கீழே குனிந்தாள். அவள் மனத்தில் ஒரு கொந்தளிப்பு ஏற்பட்டது.

''ஐயா!.....'' என்றாள். பிறகு மேலே பேச முடியாமல் நின்றாள்.

''நீங்கள் மனம் திறந்து சொல்லலாம். அதைக் கேட்டுக் கொள்ள நான் அருகதை படைத்தவன் என்பதை நீங்கள் இதற்குள் உணர்ந்திருக்க வேண்டும்'' என்றான் அவன்.

சுவர்ணமுகி நிமிர்ந்தாள். நிறையிட்டுக் கொண்டு கண்ணீர் அவள் விழிகளில் துடித்தது.

''ஐயா!'' என்றாள்.

சிறிது நேரம் தடுமாறினாள்.

''ஐயா!'' என்றாள் மீண்டும். ''நாங்கள்... நாங்கள்....'' என்று மேலே போகத் தயக்கமாகி நிறுத்தினாள்.

ஸ்ரீரங்கன் அவளை இரக்கத்துடன் பார்த்





அருள்வாக்கு

## பேரானந்தத்துக்கு வழி

**சா**ஸ்திரப் பிரகாரம் நடப்பது 'இந்தக் காலத்தில் சாத்தியமே இல்லை என்று நினைத்து விடக்கூடாது. வியாபார வேகத்தில் வளர்ந்து விட்ட லௌகிக நாகரிகத்தை விட்டு விட்டு, தேவைகளைக் குறைத்துக் கொண்டால் யாருமே இப்படி ஆசாரங்களை விட்டுப் பணத்துக்காகப் பறக்க வேண்டியதில்லை. பணத்துக்காகப் பறக்காதபோது பகவத் ஸ்மரணத்துக்கு நிறைய அவகாசம் கிடைக்கும். வாழ்க்கையில் நிம்மதியும், திருப்தியும் சௌக்கியமும் தன்னால் உண்டாகும்.

கர்ம அனுஷ்டானங்களைச் செய்யப் பண வசதி வேண்டியதே யில்லை. ஆடம்பரமாகச் செலவு செய்து பூஜை செய்ய வேண்டும் என்பதில்லை. காய்ந்த துளசி தளமும் வில்வ பத்ரமும் பூஜைக்குப் போதும். நாம் சாப்பிடுகிற அன்னத்தையே நைவேத்தியம் என்று காட்டினால் போதும். 'விவாகமும் சாஸ்திர அனுஷ்டானம்தானே? அதற்கு ஏகமாகச் செலவாகிறதே' என்று கேட்கலாம். ஆனால் இப்போது நடக்கிற ஆடம்பரம் எதுவுமே சாஸ்திர சம்மதமான விவாகத்துக்குத் தேவையில்லை. குறிப்பாக இப்போது விவாகங்களில் மிகப் பெரிய செலவாக உள்ள வரதட்சிணைக்கு சாஸ்திர சம்மதம் இல்லை. சாஸ்திர சம்பந்தமான கர்மங்களுக்குப் பணம் முக்கியமாக இருந்தால் பணக்காரர்களுக்கு மட்டும்தான் நம் மதம் உரித்தானது என்று ஆகிவிடும். உண்மையில் அப்படி இல்லவே இல்லை.

அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நாலு வாழ்க்கைப் பயன்களில் இன்பத்தை மட்டும் தேடி அதற்காகப் பொருளுக்காக அலைந்து கொண்டிருக்கிறோம். இதை மாற்றி வீட்டுக்காக (மோட்சத்துக்காக) அறத்தின் (தர்மம்) மூலம் பாடுபட வேண்டும்.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

தான். ''வந்து....'' என்று தொடங்கி, ''என்னை நம்பினால் மட்டும் நீங்கள் சொல்லலாம். இல்லாவிட்டால் விட்டு விடுங்கள்'' என்றான்.

கண்களைச் சிறிது நேரம் மூடித் திறந்தான்.

''ஐயா.... ஐயா!.... சொல்கிறேன்.... நிச்சயம் சொல்கிறேன்... தாங்கள் என்னை யாரென்று நினைக்கிறீர்களோ, அவனேதான் நான்!''

அவன் கண்கள் பனிச்சிட்டன.

''சுவர்ணமுகி!'' என்றான்.

அவள் தலையை மட்டும் அசைத்தாள். பிறகு, ''என் வாயால் சொல்ல வைக்காதீர்கள். நான் சபதமிட்டிருக்கிறேன்!'' என்றாள்.

''யாரிடம்?''

''தளவாய் ரங்கப்பரிடம்.''

''என்ன சபதம்?''

அவர் அனுமதி யில்லாமல் என்னைப் பற்றிய உண்மையை யாரிடமும் சொல்ல மாட்டேன் என்று!''

''அவர்தான் இறந்து விட்டாரே!''

''உண்மைதான் ஐயா! ஆனால் அவர் அந்தச் சபதம் என்னிடமிருந்து வாங்கியதற்கான காரணங்கள் இன்னும் இறக்கவில்லை.''

''என்ன காரணங்கள்?''

''இந்த விஜயநகர ராஜ்யம் உள்பூசல்கள் எல்லாம் ஒழிந்து ஒரு அமைதி நிலைக்கு வந்த பிறகே நான் என் உண்மையைச் சொல்ல வேண்டும்! அதற்கு முன் சொன்னால் ஏற்கெனவே உள்ள குழப்பத்தை அது இன்னும் அதிகமாக்கி விடும் என்று கூறினார். ரங்கப்பா சுவர்க்கம் போய்விட்டார். ஆனால் அவர் கூறிய காரணங்கள் இன்னும் அப்படியே இருக்கின்றன, இல்லையா?'' என்று கேட்டாள் அவள்.

ஸ்ரீரங்கன் அவள் கூறியதைக் கேட்டு யோசித்தான்.

''ஆமாம் இளவரசி! தாங்கள் கூறியது உண்மை. ஆனால் நிலைமையைப் பாருங்கள். தாங்கள் யார் என்பது இப்போது பரவலாகத் தெரிந்து விட்டது. அதிலும் நண்பர்களைவிட விரோதிகளிடம்தான் அதிகம் தெரிந்திருக்கிறது. இது பாதகம் இல்லையா?''

''பாதகம்தான்! ஆனால் சந்தர்ப்ப வசத்தால் நேர்ந்து விட்டது அது. திருப்பதிப் போரில் ரங்கப்பா மரண அடி பட்டு விழுந்தார். அவர் இறப்பதற்கு முன் என் இரகசியத்தை யாரிடமாவது சொல்லிவிட நினைத்தார். அதனால் அவருடன் நெருக்கமாகப் பழகி, நம்பிக்கைக்குப் பாத்திரமான இருவரிடம் மட்டும் கூறினார். அந்த இருவரில் ஒருவர் நல்லவர். இன்னொருவர் தீயவர், எதிரிகளின் உளவாளி!''

''யார் அவர்கள்?'' என்றான் ஸ்ரீரங்கன்.

''ஒருவர் அர்ச்சுன தேவன். மற்றவர் தோதாத்ரி என்ற தோதா!''

''தோதா?''

''ஆமாம். அவர்தான் உளவாளி. என்னையே வஞ்சிக்கப் பார்த்தார். நல்ல வேளையாகப் புரிந்து கொண்டேன்.''

''இப்போதுதான் எனக்குப் புரிகிறது, இளவரசி! விஷயம் வெளிப்பட்ட வழி தெரிந்துவிட்டது!'' என்று கூறிய ஸ்ரீரங்கன் யோசித்துவிட்டு, ''தலைக்குத் தலை இப்போது உங்களைத் தேடி அலைகிறார்கள். கிருஷ்ண வேணியும் என் தாயாரும் கூட இங்கிருந்து போய்ச் செய்தியைப் பரப்பி யிருப்பார்கள்! உடனே நாம் இந்த இடத்தை விட்டு அகல வேண்டும். சீக்கிரம் ஏதாவது சாப்பிடுங்கள். புறப்படலாம்!'' என்றான் அவன். பரபரப்பு அவனிடம் தோன்றி விட்டது.

சுவர்ணமுகி கைகளைப் பிசைந்தாள்.

''ஐயா, கஷ்டங்களுக்கு மேல் கஷ்டங்கள் வந்தால் என்ன செய்வது? என் ரகசியம் வெளியானதிலிருந்தே இவ்வளவு சோதனை நடக்கிறதே! இனியும் என்ன நடக்குமோ?'' என்று வேதனையுடன் கூறினாள் அவள்.

''சொல்லுங்கள், சுவர்ணமுகி! நமக்கு அதிக நேரமில்லை. நீங்கள் எங்கே போக விரும்புகிறீர்கள்?''

அவள் தயங்கினாள்.

பிறகு, ''ஐயா! அர்ச்சன தேவன் எங்கிருக்கிறார்? அவரை நான் பார்க்க முடியுமா?'' என்று கேட்டாள் சிறிது படபடப்புடன்.

## கடவுள் காப்பாராக!

இந்த ஆண்டு ஜனவரி முதல் ஜூலை முடிய ஏழு மாதங்களில் ஏற்பட்ட ரயில் விபத்துக்கள் 525. இதில் உயிரிழந்தவர்களின் எண்ணிக்கை 326. இந்த விபத்துக்களில் 403 சரக்கு ஏற்றும் கூட்ஸ் வண்டிகளும் 120 பாசஞ்சர், எக்ஸ்பிரஸ் மற்றும் மெயில் வண்டிகளும் சம்பந்தப்பட்டிருந்தன.

விபத்துகளுக்கான காரணங்களை ஆராய்ந்ததில் 176 விபத்துக்கள் ரயில்வே ஊழியர்களின் கவனக் குறைவாலும், 132 விபத்துக்கள் மெக்கானிக்கல் கோளாறுகளாலும், 44 விபத்துக்கள் தண்டவாளங்கள் பழுதடைந்ததாலும், மற்றும் 40 விபத்துக்கள் சதி வேலையாலும் ஏற்பட்டன என்று கண்டு பிடிக்கப்பட்டது.

இந்த விவரங்களை அளித்தவர் வேறு யாருமல்ல, ரயில்வே துணை மந்திரியாக இருக்கும் திரு மல்லிகார்ஜுன்தான்! லோக் சபையில் தெரிவித்தார்.

ரயில் விபத்துக்கள் குறைய இனி அரசாங்கத்தை வேண்டிப் பயன் இல்லை. ஆண்டவனைத்தான் வேண்ட வேண்டும்!

தகவல் : 'ஹிந்து' அனுப்பியவர் : சூரஜ்



''அர்ச்சுனன்?'' என்று கேட்டான் ஸ்ரீரங்கன். ''தெரியவில்லையே!'' என்றான் வெறுமையுடன்.

சுவர்ணமுகியின் முகம் சாம்பியது.

''ஏன்? அவர் உங்களுக்குத் தெரிந்தவரா?''

''ரங்கப்பாவீட்டுக்கு அடிக்கடி வருவார்.''

''ஓ, அப்போது பழக்கமா?'' என்றான்.

''இல்லை! அப்போது பார்த்தது கூட இல்லை. இப்போதுதான் தெரியும்!''

ஸ்ரீரங்கன்முகம் சலனமில்லாமல்இருந்தது.

''இப்போது அவரது இருப்பிடம் போக விரும்புகிறீர்களா?''

''இல்லை'' என்றாள் அவள். ''பார்க்க விரும்புகிறேன் அவ்வளவுதான்'' என்றாள்.

மனத்தில் ஒரு பாற்கடல் பொங்கியது. விம்மியஅலைகள் மேலும்மேலுமாக எழுந்தன. இமை ஓரம் ஒரு சந்திரன் தளும்ப, சொப்பனமாக வானம் விழித்தது. ஒரே ஒரு குயில் ''அர்ச்சுனா! அர்ச்சுனா!'' என்று இசைத்தது. எங்கும் அதன்குரல் வர்ணங்களாக விழுந்தன.

அவள் கண்கள் கூழாகி அலர்ந்து நிற்க, ஸ்ரீரங்கன் அவளையே சிறிது நோக்கினான்.

''சுவர்ணமுகி! அர்ச்சுனன் இப்போது வேங்கடராஜாவோடு இருந்தாலும் இருப்பார்.''

''அப்போ சந்திரகிரிக்கே போகிறேன்.'' என்று படபடத்துக் கூறினாள் அவள்.

''வேங்கடராஜா இப்போது சந்திரகிரியில் இல்லை'' என்றான்.

''எங்கே போயிருக்கிறார்?''

''வேலூருக்கு.''

''ஏன்?''

''சந்திரகிரி கைமாறி விட்டது.''

''அப்படியா?'' என்றாள் அதிர்ச்சியுடன்.

''ஆமாம்! இம்மராஜாவின் ராஜ்யம் அங்கே நடக்கிறது.''

அவளது முகத்தில் அழுகைக் குறி வந்தது.

''ஐயா! நான் ஒரு அனாதை! என் உறவினர்கள் யாவரும் மறைந்து விட்டார்கள்! அல்லது கொல்லப்பட்டு விட்டார்கள். பரிச்சயமானவர்களும் அநேகமாக யாரும் இல்லை. சந்திரகிரிக்காவது போகலாம் என்று நினைத்தேன். அதுவும் போய்விட்டதே!'' என்றாள்.

பிறகு கையைப் பிசைந்தவாறு ''ஐயா! வேலூர் போனால் என்ன? வேங்கடவர் அங்கேதானே இருக்கிறார்!'' என்று கேட்டாள் அவள்.

''ஓ! போகலாம்!'' என்றான் அவன்.

''அது பாதுகாப்பான இடம்தானா?''

''ஆமாம்!'' என்றான் அவன்.

அன்று மாலை அவர்கள் புறப்பட்டார்கள். மறுநாள் மாலை வேலூரை அடையும்போது கோட்டை வாசலிலேயே பெரிய பரபரப்பு ஏற்பட்டது. கோட்டைக் கதவுகளை அவசரமாக மூடிக்கொண்டிருந்தார்கள்.

அகழிப் பாலத்தையும் உருவிக் கொண்டிருந்தார்கள். விசாரித்ததில் 'நாயக்கர் உத்தரவு' என்று தெரிய வந்தது.

இருவரும் அகழிக் கரையில் விக்கித்து நிற்க, குதிரை ஒன்று வேகமாக ஓடிவந்து விளிம்பருகில் பிரயாசையோடு நின்றது.

சுவர்ணமுகி திரும்பிப் பார்த்ததும் திடுக்கிட்டாள்.

(தொடரும்)

# பல்கலைக் கோலங்கள்



எம். சாந்தப்பா



வி. ஐ. சுப்பிரமணியம்



கி. வா. ஜ.

சென்னை பல்கலைக் கழகத் துணை வேந்தராகப் பதவி ஏற்றிருக்கும் டாக்டர் எம். சாந்தப்பாவுக்கு வயது 58. சொந்த ஊர் அனந்தப்பூர். இரண்டு பெருமைகள் உண்டு. ஒரு ஹரிஜன் இந்தப் பதவி ஏற்பது இதுவே முதல் தடவை என்பதுடன், பல்கலைக் கழகப் பேராசிரியர் ஒருவர் துணை வேந்தராக இருப்பதும் முதன் முறை.

சென்னையிலும், வாரணாசி இந்துப் பல்கலைக் கழகத்திலும் படித்த இவர், விஞ்ஞானப் பேராசிரியராகத் தம் உத்தியோகத்தைத் துவக்கினார். முப்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆசிரியராக இருந்த அனுபவத்துடன் மேல் ஆராய்ச்சிக்காக மாணவர்களுக்கு வழிகாட்டும் திறனும் படைத்தவர். கிட்டத்தட்ட முந்நூறுக்கும் மேல் விஞ்ஞான சம்பந்தமாகக் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். வெளி நாடுகள் பலவற்றிலும் விஞ்ஞானக் கருத்தரங்குகளில் பங்கு ஏற்றிருக்கிறார்.

மத்திய தோல் ஆராய்ச்சி நிலைய இயக்குனராக இருந்தவர். அத்துறையில் ஈடு இணையற்றவரென்று பெயர் பெற்றிருக்கிறார். வெளி நாடுகளுக்குத் தோல் ஏற்றுமதி செய்ய இவருடைய விஞ்ஞான அறிவு வெகுவாகப் பயன்பட்டிருக்கிறது.

கஸ்தூரிபா நகரில் அமைதியான சூழ்நிலையில் குடியிருந்து வருகிறார். மனைவி, ஐந்து குழந்தைகள். (மூத்த மகள் சைலகுமாரி டாக்டர்) விஞ்ஞான ஆராய்ச்சியிலேயே முழுக்க முழுக்கத் தம் காலத்தைச் செலவிட்டவருக்குத் துணை வேந்தர் அனுபவம் முற்றும் புதியதாக இருக்காதோ? இருக்காது. ஏற்கனவே வெங்கடேஸ்வரா யுனிவர்ஸிட்டியில் ஒன்றரை ஆண்டுகள் இப்பதவி வகித்து அனுபவப்பட்டவர்தான்.

-தமயந்தி-சாருகேசி

● தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருக்கும் வி. ஐ. சுப்பிரமணியம் 1952ல் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றியிருக்கிறார். டி.கே.சி. 'வட்டத் தொட்டி'யில் பங்கு கொண்டிருக்கிறார். ஆ.இ.ரே. டெல்லியில் இரண்டாண்டுகள் செய்தி அறிவிப்பாளராகப் பணியாற்றிய பின் 59லிருந்து கேரளா பல்கலைக் கழகத்தில் மொழி ஆராய்ச்சியில் பேராசிரியராக இருந்திருக்கிறார்.

நீலகிரியில் வசிக்கும் தோடர் மொழியிலும், மீனவர் வார்த்தைகளிலும் மொழி ஆராய்ச்சி செய்துள்ள சுப்பிரமணியம், துணை வேந்தராக என்ன சாதிக்க எண்ணியிருக்கிறார்? ராஜ ராஜ சோழனுக்குச் சரித்திரத்தில் பெரும் பங்கு உண்டு. அதை நன்கு நிலைநாட்டும் வண்ணம் இந்திய சரித்திரத்தை மறுபடி எழுதவிருக்கிறாராம்.

நாகர்கோயில் வடசேரியைச் சேர்ந்த இந்த ஐம்பத்து ஆறு வயது மனிதருக்கு வேறு ஒரு கனவும் உண்டு. — கன்யாகுமரி மாவட்டத்தில் ஒரு பல்கலைக் கழகம் துவக்கப்பட வேண்டும்.

துணை வேந்தரின் தம்பி திரு ஏ. மகாதேவனிடமிருந்து தகவல் பெற்றவர்:

-தமயந்தி

● சிறையில் இருக்க நேரிட்டால் கலைஞர் கருணாநிதி எப்படி சிறையிலே பொழுதைக் கழிப்பார்? கழகப் புள்ளி ஒருவர் சொன்னார்: படிப்பார்; ஏதாவது எழுதுவார். மற்ற நேரங்களில் உடன் சிறையிலிருக்கும் ஏனைய கழக முன்னணியினருடன் 'ரம்மி' ஆடுவார். ஆட்டத்தில் ரொம்ப வல்லவர் கலைஞர். சிறையில் கணக்கு வைத்துக் கொண்டு, வெளியில் வந்ததும் 'செட்டில்' செய்து கொண்டு விடுவார்கள்.

ஸ்டேக்ஸ் எவ்வளவு?

நோ கமெண்ட்ஸ்!

—ஜூலி

● சமீபத்தில் உடல் நலம் சரியில்லாமல் இஸபெல்லா ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருந்த கி. வா. ஜகந்நாதன் அவர்களைச் சந்தித்தேன். சொற்பொழிவுகளும், சுற்றுப் பயணங்களுமாய்ச் சுற்றிச் சுற்றி வரும் இந்த 76 வயது இளைஞரை



கலைஞர்

ஆஸ்பத்திரி அறையில் பார்க்க ரொம்ப சங்கடமாயிருந்தது.

தம் மனைவி கொண்டு வந்து கொடுத்த பாலை வாங்கிக்கொண்ட கி.வா.ஜ. அந்த நிலையிலும், ''சரி, பால் வந்தாச்சு: இன்னைய தபால் என்னாச்சு'' என்று சிலேடையாய்க் கேட்டு எல்லோரையும் ரசித்துச் சிரிக்க வைத்தார்.

ஓய்வில்லாமல் சுற்றிக் கொண்டிருக்கும் கி.வா.ஜ.வை ஓய்வு எடுத்துக்கொள்ளச் செய்வது அவர் குடும்பத்தவருக்குப் பெரிய பிரச்னையாகவே இருக்கிறது. —உத்தமன்

● பலவித ஊனங்களை உடைய அறுநூற்றி ஐம்பது குழந்தைகள் முதன் முதலாக அணி வகுப்பு நடத்தினார்கள். சென்னை அண்ணா சாலையில் உள்ள லிட்டில் ஃப்ளவர் ஊனமுற்ற குழந்தைகள் பள்ளியில்தான். சென்னை ஊனமுற்ற குழந்தைகள் நல்வாழ்வுக் கழகம் இந்த நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தது. கலை நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் நடத்தினார்கள். பார்வையற்ற குமாரி ராஜேஸ்வரி நிகழ்ச்சிகளைத் தொகுத்தளித்தார்.

பாண்டிச்சேரி முதலமைச்சர் திரு டி. ராமச்சந்திரன் தலைமை வகித்தார். குழந்தைகளைப் பாராட்டி நெகிழ்ந்த அவர், தமது ஒரு மாதச் சம்பளம் மட்டுமின்றி முதலமைச்சர் நிதியிலிருந்து ரூபாய் ஐயாயிரமும் நன்கொடையாக அறிவித்தார். ''எனக்கு இத்தனை மாலைகள் எதற்கு? ஒரு பூ போதுமே! மாலைகள் வாங்கிய பணத்தை இக் குழந்தைகள் நலனுக்குச் செலவழிக்கலாமே'' என்றார்.

விழா முடிவில் தேசிய கீதம் ஒலிக்கையில் சின்னக் குழந்தைகள் சிலை போல் நின்றது நம் சினிமாத் தியேட்டர்களில் தேசிய கீதத்தின்போது பஸ்ஸைப் பிடிக்க ஓடும் நபர்களை நினைவூட்டியது. —சிக்கி

● தஞ்சை மாவட்டத்திலேயே வயதான மூதாட்டி ஒருவர் பாபநாசம் சித்தூரில் வசிக்கிறார். இவருக்கு வயது 130. இவருக்கு முதியோர் உதவித் தொகை மாதம்தோறும் கிடைத்து வருகிறது. ஆயுளைக் காப்பாற்ற வைட்டமின், சத்தான உணவுகள், பழங்கள் எதுவும் சாப்பிடும் வசதி இல்லை. ஆனாலும் 130 வயதிலும் அல்வா, ரவா தோசை மீன் கறி சாப்பிடுவார்!— யாரேனும் வாங்கிக் கொடுத்தால்! நல்ல ஜீரண சக்தியும் உண்டு.

இந்த மூதாட்டியின் பெயர் லோகாம்பாள். இந்த மூதாட்டியின் மகள் கோவிந்தம்மாள். வயது 110. வீடு பெருக்கி வீட்டு வேலைகள் செய்யும் வலுவு பெற்றிருக்கிறார். சில நேரம் கூறுகட்டிக் கடலை வியாபாரமும் செய்கிறார்! -ஏ. சுவாமிநாதன்

போட்டோ : ஜயந்தி ஸ்டுடியோ நாதன்

● அண்ணா நகரில் இந்தியன் பாங்குக்குள் நுழைந்தேன். அழகிய கொலு! வங்கியின் மானேஜர் திருமதி கௌரி அன்புடன் அழைத்து, வெற்றிலை பாக்கு, பழம் அடங்கிய பை கொடுத்து உபசரித்தார்.

சர்வதேசப் பெண்கள் ஆண்டில் துவங்கப்பட்ட இந்தக் கிளையில் பணிபுரியும் அனைவருமே பெண்கள்தான்.

கொலு வைக்கும் எண்ணம் எப்படித் தோன்றியது?

''இந்தக் கிளை ஆரம்பித்தபோது மானேஜராக இருந்த திருமதி ஜெயா ஏதாவது புதுமையாகச் செய்ய வேண்டும் என்று எண்ணி நவராத்திரி கொலு வைத்தார். நான் அதைத் தொடர்ந்து நடத்தி வருகிறேன். மயிலாப்பூர் கிளையிலும் கொலு வைக்கிறார்கள்'' என்றார் கௌரி.

ஒவ்வொரு வருடமும் நவராத்திரியின் போது வாடிக்கையாளர்களுக்குக் கொலு அழைப்பிதழ் அனுப்பி மாலையில்வரும் பெண்களுக்கு வெற்றிலை பாக்கு பழம் கொடுத்து உபசரிக்கிறார்கள். இந்தக் கிளைக்கென்று ஒதுக்கப்படும் ''எண்டர்டெயின்மெண்ட் அலவன்ஸ்'' பணத்தை இவர்கள் இந்தச் சமயத்தில் பயன்படுத்திக் கொள்கிறார்கள். -கலா மூர்த்தி



ஊனமுற்ற குழந்தைகள் அணிவகுப்பில் ஒருபகுதி





இந்தியன் பாங்கில் கொலு

# உள்ளத்தில் பாரததேவி, உதட்டில் பாஞ்சாலி!



துரியோதனன் அவையில் நின்று பாஞ்சாலி வாடிடும் கட்டத்திற்கு வியாசர், எழுச்சி தரும் வகையில் பெயர் தரவில்லை.

வில்லி புத்தூரார், "சூது போர்ச் சருக்கம்" என்று பெயர் தந்தார்.

வைணவப்பௌராணிகர்கள் "திரௌபதை மான சம்ரட்சணம்" என்று பெயர் தந்துள்ளனர்.

நாடகக்காரர்கள் "சூது—துகிலுரிதல்" எனப் பெயர் தந்துள்ளனர்.

இவர்களிடமிருந்தெல்லாம் வேறுபட்டு நின்று "பாஞ்சாலி சபதம்" என்றார் பாரதியார். காரணம், அவர் பாஞ்சாலியை பாரத தேவியாகக் கண்டது தான்.

பாரதி, ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள ஆங்கிலேயர் நமது தேசத்தை அடிமைப் படுத்தி ஆண்டபோது வாழ்ந்தவன் ஆதலால், கௌரவரிடம் சிக்கி அல்லலுற்ற பாஞ்சாலியை, பரங்கியரிடம் சிக்கி பதங் குலைந்த பாரதத் தாயாகவே கண்டான். ஆம்; அவன் உள்ளத்திலே பாரத தேவி; உதட்டிலே பாஞ்சாலி!

பாஞ்சாலி சபதத்திலே வரும் பல கட்டங்களைத் தேச விடுதலைப் போருடன் ஒப்பிட்டுக் காட்டி அந்த நாளில் காங்கிரஸ் மேடைகளில் தேச பக்தர்கள் பேசவுண்டு. நானே அப்படிப் பேசியிருக்கிறேன்.

பாரதியார் பாஞ்சாலி துகிலுரியப்படும் கட்டத்தைக் கீழ்வருமாறு காட்சிப்படுத்தி யிருக்கிறார்:

"ஆடை குலைவுற்று நிற்கிறாள் — அவள்
ஆவென் றழுது துடிக்கிறாள் — வெறும்
மாடு நிகர்த்த துச்சாதனன் — அவள்
மைக்குழல் பற்றி இழுக்கிறான் — இந்தப்
பீடையை நோக்கினன் வீமனும் — கரை
மீறி யெழுந்தது வெஞ்சினம்"

இது பாரதி வரைந்த சித்திரம். இதனை அந்நாளில் காங்கிரஸ் மேடைகளில் சிறிது திருத்திப் பாடுவோம்.

இவ்வரிகளை உணர்ச்சியோடு சொல்லி மேலே சொல்வதற்குள் கேட்கின்ற மக்கள், "போலோ பாரத் மாதாகி ஜெய்" என்று ஆவேசத்துடன் கோஷிப்பார்கள்.

"அன்னை பாஞ்சாலி சபதம் அறைதல் கேட்டேனடா!
முன்னைக் கதையெல்லாம் கண்ணின் முன் நடந்ததடா!"

என்று கவிமணி தேசிக விநாயகனார் பாடியுள்ளார்.

"புதுமைக் கவி", "புரட்சிக் கவி" என்றெல்லாம் போற்றப்பெறும் பாவேந்தர் பாரதிதாசனார்,

"புதிய நெறி பாஞ்சாலி சபதம் போலே
தேனினிப்பில் தருபவர் யார்?"

என்று வினவெழுப்பி, "யாருமில்லை" என்ற பதிலையும் அதிலே மறைத்து வைத்துள்ளார்.

பாரதியார் தமது புலமைத் திறமைக்குப் பாஞ்சாலி சபதத்தையே சான்று காட்டுகிறார். அந்த மகாகவி, "பொன் வால் நரி" என்னும் பெயரில் சிறு கதை ஒன்றை ஆங்கிலத்தில் எழுதினார். அதைப் பாராட்டினர் பரங்கி மொழி பக்தர்கள்! பாரதியோ, அவர்களைப் பழித்துரைக்கின்றார். குவளைக்கண்ணன் என்னும் பெயருடைய தனது நண்பனுக்கு எழுதிய கடிதத்திலே அவர் கூறியுள்ளதைப் பார்ப்போம்:

"போகச் சொல்லு விதவைப் பசங்களை. நான் என்னுடைய பாஷையில் என் முழு மூளையையும் கசக்கிப் பிழிந்து 'பாஞ்சாலி சபதம்' எழுதியிருக்கிறேன். அது நன்றாக இருக்கிறது என்று ஒருவனும் எனக்கு ஒரு கடிதமும் எழுதவில்லை. அந்தப் புத்தகத்தை நீ ஒருவன்தான் வாசிக்கிறாய். ஆங்கிலத்தில் எழுதிய இந்தப் 'பொன் வால் நரி'க்கு நூற்றுக் கணக்கான பிரதிகள் உடனே வேண்டுமாம்!"

"விதவைப் பசங்கள்" என்னும் கொச்சை மொழியைப் பயன்படுத்தி ஏசும் அளவுக்குப் பரங்கி மொழிப் பக்தர்களிடம் சினம் கொண்டிருந்தார் பாரதியார். தனது முழு மூளையையும் கசக்கிப் பிழிந்து எழுதியதாக பாரதியாரே கூறியிருப்பது நினைவில் கொள்ளத்தக்க தாகும். பாஞ்சாலி சபதம் எழுதுமாறு தம்மைத் தூண்டிய சக்தி பற்றியும் 'சபதத்'தின் முன்னுரையில் பாரதியார் கூறியிருக்கிறார். அது வருமாறு:

"தமிழ் ஜாதிக்குப் புதிய வாழ்வு தரவேண்டுமென்று கங்கணம் கட்டி நிற்கும் பராசக்தியே என்னை இத்தொழிலிலே தூண்டினாளாதலின் இந்நடை நம்மவர்க்குப் பிரியந் தருவதாகும் என்றே நம்புகிறேன்."

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து) ✓

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543) Editor : K. Rajendran